மொழிபெயர்ப்பு கட்டுரைகள்

தொகுப்பு - அன்பரசு சண்முகம்

தொகுப்பில் உதவி - விக்டர் காமெஸி, கா.சி. வின்சென்ட்

வெளியீட்டு அனுசரணை - ஆராபிரஸ் - கோமாளிமேடை

அட்டைப்படம்

Pinterest

அட்டைப்பட உருவாக்கம்

Canva.com



நன்றி
தேசிய நாளிதழ்கள், வார இதழ்கள், மாத இதழ்கள்

----------------------------

இந்த நூலை வாசிப்பவர்கள் இந்தியா எப்படி வளர்ந்தது, என்ன நிலை நோக்கி செல்கிறது என்பதை புரிந்துகொள்ள முடியும். இந்த தொடர்வரிசை கட்டுரைகளுக்காக முக்கியப் பங்களிப்பு டைம்ஸ் ஆஃப் இந்தியா ஆங்கில நாளிதழ்தான். அவர்களின் கட்டுரைத்தொடர்தான் இப்படி தமிழில் எழுதலாமே என்று தோன்ற வைத்தது. வாசியுங்கள். நன்றி!

1

## பால் உற்பத்தியில் இந்தியா சாதித்த கதை!




**இந்தியா 75**
**கூட்டுறவு நிறுவனங்களின் வெற்றிக்கதை.**

குஜராத்திலுள்ள கைரா என்ற மாவட்டமே கூட்டுறவு அமைப்பு முறையில் பால் உற்பத்தியாளர் சங்கங்களை அமைக்க முக்கிய காரணம். இதனை நிர்வாகம் செய்த கேரளத்தை பூர்வீகமாக கொண்ட வர்க்கீஸ் குரியன், ஏழை மக்களை சுரண்டிய பால் நிறுவனங்களை விரட்டியடித்தார். தற்சார்பான பொருளாதாரத்தை அமுல் நிறுவனம் மூலம் சாத்தியப்படுத்தினார். இந்தியா 75 என்ற வரிசையில் அமுலின் கதை முக்கியமானது.

இந்தியா இன்று பால் உற்பத்தி துறையில் முக்கியமான நிறுவனமாக உள்ளது. அதுவும் தனியார் நிறுவனங்களை தாண்டி வெற்றித்தடங்களை பதித்துள்ளது. இந்த நிறுவனம் இப்போது பிஸ்கெட்டுகள், பிரெட், சாக்லெட் என பல்வேறு துறைகளிலும் கால் பதித்து வருகிறது. ஆனால் இதற்கான தொடக்கம் என்பது மிக எளிமையாகவே இருந்தது.



வர்க்கீஸ் குரியன், திரிபுவன்தாஸ் படேல், ஹெச்எம் தலாயா

தற்போதைய ஆனந்த் என்ற இடத்தில் உள்ள கிராமங்களில் இருந்து தினசரி 250 லிட்டர் பாலை கைரா மாவட்ட பால் உற்பத்தியாளர் சங்கம் பெற்று விற்று வந்தது. ஆங்கிலேயர் காலத்தில் ஏகபோக நிறுவனமாக இருந்தது பாய்சன் டைரி என்ற நிறுவனம். இந்த நிறுவனம் பால் உற்பத்தியாளர்களுக்கு மிக குறைந்த விலையை கொடுத்து வந்தது. இதனால் பாதிக்கப்பட்ட விவசாயிகள் மனம் நொந்து போய் தங்கள் கஷ்டங்களை சர்தார் வல்லபாய் படேலிடம் சொன்னார்கள். இதன் பின்னர்தான், கைரா மாவட்டத்திலுள்ள சாமர்கா என்ற கிராமத்தில் ஒரு கூட்டம் நடைபெற்றது. இதில் வல்லபாய் படேல், சுதந்திரபோராட்ட வீர ர் திரிபுவன்தாஸ் படேல், மொரார்ஜி தேசாய் ஆகியோர் பங்கு பெற்றனர். இதில் வல்லபாய் படேல் கூறிய யோசனைப்படி கூட்டுறவு உற்பத்தியாளர் சங்கம் அமைக்க முடிவானது.

கைரா மாவட்டம் முழுக்க பால் விநியோகம் செய்யும் உரிமையை பாய்சன்டைரி நிறுவனம் பெற்றிருந்தது. இதன் ஏகபோக உரிமையை தடுத்து விவசாயிகளுக்கு உதவ, கூட்டுறவு சங்கம் டிசம்பர் 14 , 1946 அன்று பதிவானது. நிறுவனத்தின் தலைவராக திரிபுவன்தாஸ் படேல் இருந்தார். இவர்தான் வர்க்கீஸ் குரியனை இதன் தலைவராக்கி அமுல் என்ற நிறுவனத்தை உருவாக்குவதற்கு முக்கியமான காரணம். இப்போது இவரை திரிபுவன்தாஸ் காகா என்று அழைக்கின்றனர்.
கேரளத்தில் பிறந்த வர்க்கீஸ் குரியன், ஆங்கில அரசின் உதவித்தொகையில் அமெரிக்கா சென்று படித்து வந்தவர். பால்வளத்துறையில் பொறியியல் படித்தார். அரசின் உத்தரவுப்படி குறிப்பிட்ட ஆண்டுகள் அவர் அரசு துறையில் பணியாற்றுவதற்கு உத்தரவானது. அவரது விருப்பம் அணுசக்தி துறை என்றாலும் திரிபுவன்தாஸின் விருப்பப்படி, கூட்டுறவு சங்கத்தை தலைவராக இருந்து வழிநடத்தினார். அவரே கூட எனக்கும் ஒரு கனவுண்டு என்ற நூலில் இதனை விரிவாக எழுதியிருக்கிறார்.

”என் அப்பாவிற்கு இயற்பியல் துறையில் பணியாற்றவே ஆசை. ஆனால் திரிபுவன்தாஸ் படேலை சந்தித்த பிறகு அவரது வாழ்க்கைக்கு ஒரு அர்த்தம் கிடைத்ததாக கூறியிருக்கிறார். விவசாயிகளுக்கான சேவகராக அவர் மாறினார். நிறைய முறை தனது சம்பளத்தைக் கூட தியாகம் செய்திருக்கிறார்” என்றார் அவரது மகளான நிர்மலா குரியன். பலருக்கும் குரியன் வாங்கிய சம்பளம் தெரியாது. கடைசி வரை அவர் பெற்ற சம்பளம் ரூ.5 ஆயிரம் மட்டுமே.

இந்தியா சுதந்திரம் பெற்றபிறகு, பாய்சன் பால் நிறுவனத்துடன் செய்திருந்த ஒப்பந்தம் முடிவுக்கு வந்தது., கைரா கூட்டுறவு நிறுவனத்தை பால் விற்பனைக்கு அரசு தேர்ந்தெடுத்தது. இந்தியாவின் முதல் குடியரசுத்தலைவர் ராஜேந்திர பிரசாத், நவ.15, 1954 அன்று அமுல் நிறுவனத்திற்கு அடிக்கல் நாட்டினார். 1956ஆம் ஆண்டு அக்டோபர் 31 அன்று நேரு நிறுவனத்தை தொடங்கி வைத்தார். இதுவே வல்லபாய் படேலின் பிறந்ததினமாகும்.
பால் உற்பத்தியை பொறுத்தவரை இந்தியாவில், எருமைப்பாலே அதிகம்.

எனவே அதிலிருந்து பால் பவுடரை தயாரிக்க நினைத்தார். இதுபற்றிய தொழில்நுட்பத்தை தேடியபோது எங்கும் ஏமாற்றம்தான். நேர்மறையான ஒரு வார்த்தை கூட கிடைக்கவில்லை. ஆனால் இப்படி பால் பவுடரை நாம் தயாரிக்க போகிறோம் என்று பிரதமர் நேருவுக்கு சொல்லியாயிற்று. இப்போது என்ன செய்வது என குரியனும், அவரது பால் உற்பத்தியில் திறமையான ஹெச்எம் தாலயா வும் பதறினர். தாலயா, பாகிஸ்தானில் பால் உற்பத்தியில் ஈடுபட்டு வந்த குடும்பத்தைச் சேர்ந்தவர். பிறகு அதற்கென வழியை கண்டுபிடித்து எருமைப்பாலில் இருந்து முதன்முறையாக பால் பவுடரை உருவாக்கினர். அதுவும் விழா நடப்பதற்கு இருபத்து நான்கு மணிநேரம் முன்னதாக.....

”குரியனும் அவரது சகாவும் கண்டுபிடித்தது முக்கியமான சாதனை. அதுவரை வளர்ந்த பெரிய நாடுகளும் கூட பசுவின் பாலில் இருந்து மட்டுமே பால் பவுடரை தயாரிக்க முடியும் என்று நம்பிக்கொண்டிருந்தனர்” என்றார் அமுலின் தலைவரான ஆர்.எஸ்.சோதி.

இவர் , குரியன் உருவாக்கிய கிராம மேலாண்மை கழகம் என்ற நிறுவனத்தில் படித்து வந்த மாணவர் ஆவார்.
கைரா மாவட்டட கூட்டுறவு சங்கம், ஒரு நாளுக்கு ஒரு லட்சம் லிட்டர் பாலை பதப்படுத்தும் திறனைப் பெற்றது. பிறகுதான் அமுல் என்ற பிராண்டில் பால் விற்பனை 1957இல் இருந்து தொடங்கியது. கூட்டுறவு இயக்கம் பிறகுதான் சூரத், வதோதரா, மெக்சனா, சபர்காந்தா ஆகிய ஊர்களிலும் பரவலாகியது. ஆனாலும் இந்தியாவின் பிற மாநிலங்களில் கூட்டுறவு இயக்கம் பெரிதாக வரவேற்கப்படவில்லை.

1964ஆம் ஆண்டு பிரதமர் லால் பகதூர் சாஸ்திரி அமுலின் கால்நடை தீவன தொழிற்சாலையைத் தொடங்கி வைத்தார். அப்போது ஒரு இரவு முழுக்க அங்கிருந்த கிராமத்தில் தங்கியவர், அமுலின் வெற்றிக்கதையை கேட்டறிந்தார். கூட்டுறவு என்பதை மனதில் பதித்தவர், தேசிய பால் மேம்பாட்டு வாரியம் என்பதை அமைக்க உத்தரவிட்டார். இதன் வழியாக ஆனந்த் போல பல்வேறு நிறுவனங்களை மாநிலங்களில் அமைக்க நினைத்தார். இதன் தலைவராக குரியனை நியமித்தார்.

1970ஆம் ஆண்டு பால் வாரியம் தனது பணிகளை தொடங்கியது. பில்லியன் லிட்டர் ஐடியா என்ற பெயரில் தனது திட்டங்களை விரிவாக்கியது. இதன் விளைவாக பால் உற்பத்தியில் தடுமாறிய இந்தியா, இப்போது இத்துறையில் வலுவாக உள்ளது.

**இந்தியாவின் முக்கியமான பால் கூட்டுறவு நிறுவனங்கள்**

பஞ்சாப் - வெர்கா
ஹரியானா - வீடா
ராஜஸ்தான் - சரஸ்
உத்தர்பிரதேஷ் - பாரக்
குஜராத் - அமுல்
மகாராஷ்டிரா - மகானந்த் அண்ட் கோகுல்
மத்தியப் பிரதேசம் - சான்சி
கர்நாடகா - நந்தினி
கேரளா - மில்மா
தமிழ்நாடு - ஆவின்
தெலுங்கானா - விஜயா
ஆந்திரா - விசாகா
ஒடிசா - ஆம்ஃபெட்
மேற்கு வங்கம் - பென் மில்க்
அசாம் - புராபி
பீகார் - சுதா

**பிரசாந்த் ரூபேரா**
**டைம்ஸ் ஆப் இந்தியா - படம் விக்கிப்பீடியா**

2

## இந்தியாவின் முக்கியமான நிகழ்ச்சிகள்!



### டெலிவரிக்கு ரெடி!

உலகம் முழுக்க இன்று இந்தியாவின் சமையல் பொருட்களை பயன்படுத்தி வருகின்றன. இப்போது அந்த பொருட்கள் இல்லாமல் ஏராளமான பொருட்களை ஏற்றுமதி செய்து வருகிறது.

2020ஆம் ஆண்டு 275. 5 பில்லியன் மதிப்பிலான பொருட்களை உலகம் முழுக்க ஏற்றுமதி செய்துள்ளது இந்தியா. இதில் பெட்ரோல், எண்ணெய், வைரம், அரிசி, மருந்துகள், நகை, கார்கள் ஆகியவை உள்ளடங்கும். அமெரிக்கா, சீனா, அரபு நாடுகள் நமது முக்கியமான வாடிக்கையாளர்கள்.

**எல்லோருமே எஞ்சினியர்கள்தான்**

இப்படி கிண்டல் செய்தாலும் கூட ஆசியாவில் சிறந்த பொறியாளர்கள் இந்தியாவில்தான் இருக்கிறார்கள். இதற்கு முக்கிய காரணம், அரசு மானிய விலையில் கல்விக்கட்டணத்தை நிர்ணயம் செய்து இருப்பதுதான்.

இதற்கான கட்டமைப்பு, நிதி ஆதாரம் எல்லாமே 1940 முதல் 50 களில் திட்டமிடப்பட்டது என்பதை யாரும் மறக்க கூடாது. வெளிநாடுகளுக்கு சென்று தங்கள் பெருமையை வெள்ளையர்களுக்கு புரிய வைத்து வென்றிருக்கிறார்கள் நமது எஞ்சினியர்கள்.

**ஐடி ஆட்கள் ப்ரோ!**

ஐடி சார்ந்த சேவைகளை குறைந்த விலையில் அதிக தரத்துடன் செய்துகொடுப்பது இந்தியாதான். 1967ஆம் ஆண்டு தொடங்கப்பட்டு டிசிஎஸ் நிறுவனத்தின் இன்றைய மதிப்பு 12 லட்சம் கோடி என்றால் அதன் வர்த்தகம் எப்படியிருக்கும் என்பதைப் பார்த்துக்கொள்ளுங்கள். தொழில்நுட்பம் தொடர்பான பல்வேறு திறன்களை இந்தியா வளர்த்துக்கொண்டுள்ளது. இதனால் நாம் நமக்கான மென்பொருட்களை தயாரிக்க கூட நேரமில்லாமல் உலகிற்கான மென்பொருள் கோடிங்குகளை எழுதி வருகிறோம்.

**தாராளமயமாக்க கர்த்தா!**

பணவீக்கம் அதிகரித்து வந்த நிலை, அரசிடம் ஊழியர்களுக்கு பணம் தரக்கூட காசு இருக்குமா என தடுமாற்றம்  இருந்தது. தங்கத்தை அடகு வைத்து பணம் பெறும் நிலை வந்தது. அதனை திறமையாக சமாளித்து இந்தியப் பொருளாதாரத்தின் கட்டுக்களை தளர்த்தினார் நிதி அமைச்சர் மன்மோகன் சிங். இதன் விளைவாக தொழில்துறை சார்ந்த கட்டுப்பாடுகள் குறைந்தன. இறக்குமதி வரி குறைக்கப்பட்டது.

வெளிநாட்டு முதலீடுகள் வரவேற்கப்பட்டன. இதனால்  வேலைவாய்ப்புகள் அதிகரித்தன. சந்தைகள் பெரிதாக மாறின. தாராளமயமாக்கல் கொள்கை காரணமாகத்தான் நிசான் காரில் பயணித்து ஸ்பேனிஸ் உடை நிறுவனத்திற்கு சென்று உடை வாங்க முடிகிறது இத்தாலி பாஸ்தாவை ஆர்டர் செய்து ஜெர்மன் பீரை துணைக்கு வைத்து சாப்பிட முடிகிறது. இந்தியாவை மாற்றியமைத்ததில் அன்றைய பிரதமர் நரசிம்மராவ், நிதி அமைச்சர் மன்மோகன் சிங் மற்றும் அவரது குழுவினருக்கு முக்கியமான பங்குண்டு.

**ஸ்டார்ட் அப் மந்திரம்**

உலகளவில் 628 யுனிகார்ன் ஸ்டார்ட்அப் நிறுவனங்கள் அட்டவணைப்படுத்தப்பட்டுள்ளன. இதில் 52 இந்தியாவைச்சேர்ந்தவை. ஒட்டுமொத்த மதிப்பில் 1 பில்லியன் என உள்ளன. இந்தியாவில் டெக்னாலஜி

சார்ந்து 42 ஆயிரம் நிறுவனங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. இது பிரதமர் மோடி தொடங்கிய திட்டம் என்பதை விட அவரது கட்சி பாஜக என்பதை நீங்கள் அறிந்துகொள்வது அவசியம்.

**வைரமே வைடூரியமே**

குஜராத்திலுள்ள சூரத்தான் வைரங்களை பட்டம் தீட்டி விற்பதில் முக்கியமான நகரம். உலகில் விற்கும் 75 சதவீத வைரங்கள் இங்குதான் பாலீஸ் செய்யப்படுகின்றன. இத்துறை மூலம் 7 லட்சம் மக்களுக்கு வேலைவாய்ப்பு கிடைக்கிறது. வருமானமாக ரூபாய் 1.8 கோடி வருகிறது.

**எரிபொருளைத் தேடி..**

1956ஆம் ஆண்டு எண்ணெய், இயற்கை எரிவாயுவுக்கான கமிஷன் தொடங்கப்பட்டது. முதன்முறையாக இந்தியா தனது பெட்ரோலிய வளங்கள் மீது கவனம் செலுத்த தொடங்கியது. அறுபதுகளிலேயே அசாம், குஜராத்தில் இயற்கை எரிவாயு கண்டுபிடிக்கப்பட்டது. மும்பை ஹைபீல்டு இடத்தில் எண்ணெய் வளம் இருப்பதை எழுபதுகளில் கண்டுபிடித்தது. இந்தியா ஆசியாவிலேயே எண்ணெய் சுத்திகரிபில் இரண்டாவது நாடு. உலகளவில் சீனாவுக்கு அடுத்தபடியாக எரிபொருட்களை இறக்குமதி செய்வதில் இரண்டாவது இடத்தை பிடித்துள்ளது நமது இந்தியா.

**ஒரே வரி!**

2017ஆம் ஆண்டு நாடு முழுக்க ஒரே வரி என்று சொல்லி கொண்டு வரப்பட்ட வரி ஜிஎஸ்டி. இப்படி சொன்னாலும் இதில் வரி சதவீதம் நான்கு அளவில் இருந்தது. அனைத்து வரிகளையும் எளிதாக ஒன்றாக்கிய வரி என்று சொன்னாலும் இதனால் மத்திய அரசுக்கு கிடைத்த அளவுக்கு வரி மாநிலங்களுக்கு கிடைக்கவில்லை. வரிகள் சீர்திருத்தத்தில் இது முக்கியமான வரி என்பது உண்மை.

**மக்களே செல்வம்!**

மேற்சொன்ன அத்தனை விஷயங்களையும் தாங்கி நிற்பது வேறுயார் மக்கள்தான். எழுபத்தைந்து ஆண்டுகள் என்பது சாதாரண விஷயம் அல்ல. 1950ஆம் ஆண்டு முதல் இந்தியாவின் மக்கள் தொகை

வளர்ந்து வருகிறது. 2050இல் இதன் அளவு 1.68 பில்லியனைத் தொடும் என்கிறார்கள். பிறகு படிப்படியாக மக்கள்தொகை குறையும் எனவும் ஆய்வாளர்கள் தெரிவிக்கின்றனர். அடுத்து என்னவாகும்? நானும் அதை எழுத காத்திருக்கிறேன்.

**ரேச்சல்**

**இந்துஸ்தான் டைம்ஸ்**

3

# இந்தியாவின் முக்கியமான தருணங்கள்!



### அமைதியான மாநிலங்கள்

பிரிவினை நடந்து ரத்த ஆறு ஓடிய பிறகு, இந்திய மாநிலங்களில் நடைபெற்று முக்கியமான மாற்றம், குறிப்பிட்ட மதம் சார்ந்த மக்கள் அதிகம் இருந்தால் அதனை தனியாக பிரிக்கலாம் என்று எழுந்த போராட்டம்தான். ஆனால் பிரதமர் நேரு இதனை ஏற்கவில்லை.

தீர ஆலோசித்து மொழி சார்ந்து மாநிலங்களை பிரித்து எல்லைகளை அமைத்தார். எல்லை சார்ந்த பிரச்னைகள் மாநிலங்களுக்குள் ஏற்பட்டால் இந்திய ஒன்றியம் உடையாமல் காப்பாற்றப்பட்டது. இன்று பிரிவினை வாத சக்திகள் அதிகாரத்தைப் பெற்று தேர்தல் ஆதாயங்களுக்காக மாநிலங்களை உடைத்து பிரிக்க முயன்று வருகின்றனர். ஆனால் அன்று நேரு எந்த ஆதாயத்தையும் எதிர்பார்க்காமல் மக்களையும், நாட்டையும் பற்றி மட்டுமே யோசித்தார். அதனால்தான் நாட்டிலுள்ள மாநிலங்கள் அமைதியாக வளர்ச்சியை நோக்கி திரும்பின.

**பால் உற்பத்தியில் புரட்சி!**

வெண்மை புரட்சி என்றுதான் கூறவேண்டும். வர்கீஸ் குரியனுக்கு காங்கிரஸ் தலைவர்கள் நேரு, இந்திராகாந்தி என பல்வேறு தலைவர்கள் தந்த ஆதரவு காரணமாக ஆனந்த் நிறுவனம் குஜராத்தில் உருவானது. இந்த கூட்டுறவு நிறுவனத்தினால் அங்கு வறுமையில் வாழ்ந்த விவசாயிகளுக்கு சரியான வருமானம் உறுதி செய்யப்பட்டது. மேலும் தனியார் நிறுவனங்களின் அதீத விலை வைகும் போக்கு மட்டுப்பட்டது. குறைந்த விலையில் நிறைந்த தரத்தை கொண்டு அமுல் இன்றும் அரசு நிறுவனம் என்றாலும் சிறப்பாக செயல்பட்டு வருகிறது. மகாராஷ்டிரா, குஜராத், கர்நாடகம் ஆகிய மாநிலங்களில் கூட்டுறவு அமைப்பில் பால் நிறுவனங்கள் சிறப்பாக செயல்பட்டு வருகின்றன.

**வடகிழக்கில் அமைதி**

ராஜீவ்காந்தியும், மிசோ அமைப்பின் தலைவரான லால்டெங்கா ஆகிய இருவரும் 1986ஆம் ஆண்டு ஒப்பந்தம் ஒன்றில் கையெழுத்திட்டனர். இதனால் அங்கு ஏற்பட்டு வந்த தீவிரவாத தாக்குதல்கள் குறையத் தொடங்கின. இதன்மூலம் இந்திய அரசு வன்முறையை அமைதிப் பேச்சுவார்த்தை மூலம் தீர்க்க முடியும் என உலகிற்கு அறிவிப்பது போல இந்த செயல்பாடு அமைந்தது. 35 ஆண்டுகளுக்கு மேலாக அங்கு அமைதி நிலவியது என்றால் அதற்கு இந்திய அரசு செய்துகொண்ட ஒப்பந்தம்தான் முக்கியக் காரணம்.

**மக்களிடம் அதிகாரம்**

மையத்தில் அதிகாரம் குவிந்து கிடந்தால் நம்மால் தெருவிலுள்ள பாதாள சாக்கடையைக் கூட சுத்தம் செய்யமுடியாது. இதை ஆராய்ந்த அரசு 1992ஆம் ஆண்டு பஞ்சாயத்து ராஜ் சட்டத்தை கொண்டு வந்தது. இதன்படி, கிராமங்களின் நடைபெறும் பணிகளை பஞ்சாயத்துகளே முடிவு செய்துகொள்ளலாம். இதற்கென மத்திய அரசு தனியாக நிதி ஒதுக்குகிறது. இந்த வகையில் பழங்குடி, தலித் மக்களுக்கான இட ஒதுக்கீடும் வழங்கப்பட்டது முக்கியமான சாதனை. மக்களுக்கு மிக அருகில் அரசு சென்று இயங்கியது இந்த வகையில் முக்கியமானது.

## நலத்திட்டம்

2006ஆம் ஆண்டு மகாத்மா காந்தி தேசிய கிராம வேலைவாய்ப்பு உறுதித் திட்டம் உருவாக்கப்பட்டது. எளிமையாக சொன்னால் நூறு நாள் வேலைவாய்ப்புத் திட்டம். இதனால் படிக்காத, கல்வியறிவு இல்லாத மக்களுக்கும் வேலைவாய்ப்பை மத்திய அரசு உறுதி செய்தது. காங்கிரஸ் அரசு கொண்டு வந்த இத்திட்டத்தை பின்னாளைய அரசு திட்ட நிதியை குறைத்தாலும் நிறுத்த முடியவில்லை என்பது இதன் வெற்றிக்கு சான்று.

## மதிய உணவுத்திட்டம்

மத்திய அரசு 1995ஆம் ஆண்டு முதல் மதிய உணவுத்திட்டத்திற்கு ஆதரவு வழங்கி வருகிறது. அரசு மற்றும் அரசு உதவி பெறும் பள்ளிகளிலும் இத்திட்டம் நடைமுறைப்படுத்தப்பட்டு வருகிறது. தமிழ்நாட்டில் இத்திட்டத்தை நீதிக்கட்சி தொடங்கிவைத்ததை காமராஜர் சிறப்பாக மேம்படுத்தினார். பிறகு வந்த அனைத்து முதல்வர்களும் இதனை மென்மேலும் விரிவுபடுத்தி மாணவர்கள் ஊட்டச்சத்துடன் கல்வி பெற உதவினர் என்பது மறக்க முடியாத சமூகநீதி வரலாறு. வட இந்திய மாநிலங்களில் மதிய உணவு திட்டத்திலும் கூட முட்டை கூடாது, வெங்காயம், பூண்டு கூடாது என சைவ உணவு கருத்தியலை புகுத்தினாலும், இத்திட்டம் இந்திய வரலாற்றில் மறக்க முடியாத ஒன்று.

## அருகில் வா புலியே!

1972ஆம் ஆண்டு இந்தியாவில் 2 ஆயிரம் புலிகள் இருந்தன. இருநூறு ஆண்டுகளுக்கு முன்னர் இந்த எண்ணிக்கை 58 ஆயிரமாக இருந்தது. 1973ஆம்ஆண்டு புலிகளைக் காக்கவென தனித்திட்டம் உருவாக்கப்பட்டது. புலிகளின் வாழிடங்களை பாதுகாக்கும் முயற்சிகள் தொடங்கப்பட்டன. 2018ஆம் ஆண்டு புலிகளின் எண்ணிக்கை 2,461ஆக அதிகரித்திருந்தது. மகத்தான வெற்றி பெற்ற திட்டத்தை அடியொற்றி யானைகளை காப்பாற்றும் திட்டமும் தொடங்கப்பட்டுள்ளது.

**உயிர் நீர்**

இந்தியாவில் தற்போது 5,264 பெரிய அணைகள் உள்ளன. 437 அணைகள் கட்டுமானத்தில் உள்ளன. ஒடிஷாவில் உள்ள ஹிராகுட் அணை இந்தியாவில் பெரிய அணையாக கருதப்படுகிறது. 1957ஆம் ஆண்டு முதலாக இந்த அணை பயன்பாட்டில் உள்ளது. நகரங்களின் வளர்ச்சி மற்றும் விவசாயத்திற்கு பெரிய அணைகள் பயன்படுகின்றன.

**இணைக்கும் பாலங்கள்**

இந்தியாவை ஒரே நாடாக இணைப்பதில் பாலங்களுக்கு முக்கியப் பங்குண்டு. 2017ஆம் ஆண்டு அசாம் தோலா சதியா என்ற பாலம் நீளமான பாலமாக கட்டப்பட்டுள்ளது. காஷ்மீரிலிருந்து கன்னியாகுமரி வரை செல்லும் செனாப் ரயில் பாதை உயரமான ரயில்பாதையாக கூறப்படுகிறது. பாலங்கள் வணிகம் தொடர்பான பிரச்னைகளை தீர்த்து வைத்துள்ளன.

**போலியோவை துரத்து!**

2014ஆம் ஆண்டு போலியோ இல்லாத இந்தியா என்று அறிவித்துவிட்டார்கள். கடைசி போலியோவால் பாதிக்கப்பட்டவர் கண்டறியப்பட்டது 2011இல்தான். நாடு தழுவிய தடுப்பூசித் திட்டம், தொடர்ச்சியாக வீட்டுக்கு சென்று பார்த்து பாதிக்கப்பட்டவர்களை கண்டறிவது, தடுப்பூசி முகாம்கள் என இந்திய அரசு உழைத்து போலியோவை விரட்டியுள்ளது.

**ரேச்சல்**

**இந்துஸ்தான் டைம்ஸ்**

**4**



## இந்தியாவின் தொழில்துறை வளர்ச்சியை ஊக்குவித்த அறிவியல் அமைப்பு!

இன்று அறிவியல் அமைப்புகள் அதில் சேர்க்கப்படும் பல்வேறு முட்டாள்களால் உலகளவில் அவமானப்பட்டுக்கொண்டிருக்கிறது. விலங்கின் கழிவுப்பொருளில் என்ன வேதிப்பொருட்கள் இருக்கிறது என ஆராய்ந்துகொண்டிருக்கிறார்கள்.

ஒருகாலத்தில் இந்திய அறிவியல் கழகம் நிறுவப்பட்டதால்தான், இந்தியாவின் தொழில்துறை சிறப்பான வளர்ச்சியைப் பெற்றது என்பது உண்மை. இந்தியன் இன்ஸ்டிடியூட்ஆப் சயின்ஸ் எனும் அமைப்பு தொழில்துறைக்கான பல்வேறு ஊக்கத்தை கண்டுபிடிப்புகளை வழங்கியது. பொதுத்துறை நிறுவனங்கள் இந்திய மண்ணில் வேரூன்ற, இந்த அறிவியல் அமைப்பின் பங்களிப்பு மிக முக்கியமானது. அதைப்பற்றித்தான் இங்கே நாம் படிக்கப் போகிறோம்.

இந்திய அறிவியல் கழகத்தை உருவாக்குவதற்கான ஐடியாவைக் கொடுத்தவர் சுவாமி விவேகானந்தர். இவர், ஜப்பானில் இருந்து சிகாகோவுக்கு ஜாம்ஷெட்ஜி டாடாவுடன் ஒரே விமானத்தில் பயணித்தார். அப்போது அவர், மேற்குலகில் இருக்கும் அறிவியல் அமைப்புகளை போல இந்தியாவில் ஒன்றை அமைக்க வேண்டும். அப்போதுதான் இந்தியர்களின் திறமையை உள்நாட்டிலேயே பயன்படுத்திக்கொள்ள முடியும் என்று வலியுறுத்தினார். இதற்குப்பிறகுதான் 1898ஆம் ஆண்டு நவ.23 அன்று தனது முடிவை விவேகானந்தருக்கு கடிதம் எழுதி தெரிவித்தார் டாடா.

டாடாவின் முடிவை நிறைவேற்றும் பொறுப்பை ஏற்றவர் பாட்ஷா. புர்ஜோர்ஜி பாட்ஷா. இவர் மேற்கு நாடுகளுக்கு சென்று அங்கு பல்கலைக்கழகங்கள் இயங்குவதை கவனித்தார். அதன் நடைமுறைகளை தெரிந்துகொண்டார். ஆக்ஸ்போர்ட், கேம்ப்ரிட்ஜ் ஆகிய பல்கலைக்கழகங்களுக்கு இந்திய மாணவர்கள் படையெடுத்து வந்து படித்துக் கொண்டிருந்தனர். இப்படி படித்த மாணவர்கள் முக்கியமான இடங்களில் வேலைக்கு சேர்ந்து நன்றாக சம்பாதித்தனர். இதற்கு காரணம், மேற்கத்திய பல்கலையில் படித்தால்,

கல்விக்கான பெரிய மதிப்பு இருக்கிறது என்பதை பாட்ஷா விரைவில் புரிந்துகொண்டார்.

விரைவில் இந்திய அறிவியல் கழகத்திற்கான வரைவை தயாரித்து டாடாவிடம் கொடுத்தார் பாட்ஷா. அதனை பெங்களூருவில் அமைப்பதென முடிவானது. காரணம், அங்கு சீதோஷ்ண நிலை நன்றாக இருப்பதால் இப்படி முடிவெடுத்தனர். 1898ஆம் ஆண்டு டிச.31 அன்று, கமிட்டி கொடுத்த வரைவை ஆங்கிலேயே அதிகாரி கர்சன் பரிசீலித்தார். இன்று அறிவியல் கழகம் நானூறு ஏக்கர்களுக்கு மேலான இடத்தில் செயல்பட்டு வருகிறது.

371 ஏக்கர் நிலத்தை ஸ்ரீ கிருஷ்ணராஜா உடையார் - 4 என்பவர் வழங்கினார்.  வைசிராய் மிண்டோ முறையான அரசு அனுமதியை கொடுத்தார்.  கழகத்தின் செயல்பாடு 1909ஆம் ஆண்டு மே 27 அன்று தொடங்கியது.
1911ஆம் ஆண்டு ஜூலை 24 அன்று இந்திய அறிவியல் கழகத்தில் முதல் பேட்ச் மாணவர்கள் படிக்க சேர்க்கப்பட்டனர்.  பொது மற்றும் அப்ளைடு கெமிஸ்ட்ரி என்ற பாடப்பிரிவு மாணவர்கள் ஆவர். இதற்கு நார்மன் ரூடோல்ப் என்பவர் தலைமை தாங்கினார். எலக்ட்ரோ டெக்னாலஜி பிரிவை ஆல்பிரட் ரே தலைமை ஏற்று நடத்தினார்.

தொடக்கத்தில் இந்திய அறிவியல் கழகம் பல்வேறு ஆராய்ச்சிகளில் கவனம் செலுத்தி உலகளவில் தன்னை நிலைநிறுத்திக்கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டது. மைசூர் திவானான சர் விஸ்வேசரய்யா, 1913ஆம் ஆண்டு கழகத்தின் கௌன்சில் உறுப்பினரானார். இவருக்கு மைசூரை தொழில்நகராக மாற்றவேண்டுமென்ற கனவு இருந்தது.
இவர் உள்ளே வந்தபிறகு ஐந்து தொழிற்சாலைகள் அங்கு உருவாக்கப்பட்டன. சோப்பு, சந்தன தொழிற்சாலை, மூங்கிலிருந்து போர்டுகளை உருவாக்கும் தொடங்கப்பட்டது.  சந்தன சோப், எண்ணெய் ஆகியவை அன்றே வெற்றி பெற்றன. மைசூர் சாண்டல் சோப் யாருக்கேனும் நினைவுக்கு வருகிறதா இது அரசு நிறுவனத்தின் தயாரிப்புதான்.

1940ஆம் ஆண்டுக்குப் பிறகு உலகப்போர் -2 முடிவுற்றபிறகு பல்வேறு பொறியியல் தொடர்பான துறைகள் இந்திய அறிவியல் கழகத்தில் தொடங்கப்பட்டன. வேறு கல்வி கழகங்களை உருவாக்கும் திட்டங்களும் இங்கேதான் உருவாக்கப்பட்டன.

உலகப்போர் -2 வின்போது பல்வேறு வீர ர்களுக்கு பயிற்சி, ராணுவ ஆயுதங்களை தயாரிக்கும் பணிகளும் நடைபெற்றன.  இந்துஸ்தான் ஏரோநாட்டிகல் நிறுவனமும் இதில் இணைந்தது. இங்கிலாந்து, அமெரிக்க விமானங்களின் பழுது பார்க்கும் பணிகள் இங்கு நடைபெற்றது. இப்பணிகளுக்கு பிறகுதான் இங்கு ஏரோநாட்டிகல் பிரிவும் தொடங்கப்பட்டது.
1950, 60 காலகட்டத்தில் சதீஸ் தவான் என்பவர் இங்கு தலைவராக இருந்தார். இவரின் வழிகாட்டுதலில் கணினி அறிவியல், தானியங்கி அமைப்பு ஆகியவை சிறப்பான வளர்ச்சி பெற்றன. சூழல், தட்பவெப்பநிலை, கடல் அறிவியல் தொடர்பான பல்வேறு மையங்கள் உருவாக்கப்பட்டன.
இங்கு உருவாக்கப்பட்ட பல்வேறு தொழில்நுட்பங்கள் அஸ்த்ரா என்ற பிரிவின் கீழ் கிராமப் பகுதியில் பயன்படுத்தப்பட்டன. இந்த அமைப்பு, இப்போது சூழலுக்கான தொழில்நுட்பமாக மாற்றப்பட்டுள்ளது.

இந்திய அறிவியல் கழகத்தின் முதல் இயக்குநர் எம் டபிள்யூ டிராவர்ஸ். இவர் சர் வில்லியம் ராம்சேவின் உதவியாளராக இருந்தவர். இதற்கு பிறகு சர் ஏஜி போர்னே, சர் மார்ட்டின் ஓ ஃபாஸ்டர், சர் சிவி ராமன் ஆகியோர் இங்கு இயக்குநர்களாக பதவியேற்று சாதித்தனர்.

ஹோமி ஜே பாபா, விக்ரம் சாராபாய், அன்னா மணி, கமலா சோஹோனி, சிஎன்ஆர் ராவ் ஆகியோர் இங்கு படித்து பல்வேறு துறைகளில் சாதனையாளர்களாக மாறிய மாணவர்கள்.

இந்திய அறிவியல் கழகம் உருவாகிய பிறகே, ஐஐடி மற்றும் இஸ்ரோ, பார்க் ஆகிய அமைப்புகள் உருவாக்கப்பட்டன.

மெல்லிய எடையில் போர்விமானங்களை உருவாக்கியவர் பேராசிரியர் ரோடம் நரசிம்மா. இதன் பெயர்தான் தேஜா. கடவுள் துகள்களை கண்டுபிடிக்கு இன்று பல்வேறு மலைகளை துளையிட்டு ஆராய்ச்சி செய்துகொண்டிருக்கிறார்கள். இதை கண்டறிந்தவர் பேராசிரியர் ரோகினி காட்போலே. கடவுள் துகளை ஹிக்ஸ்போசான் என்று அழைப்பார்கள்.
இன்று இந்திய அறிவியல் கழகத்தில் நாற்பதுக்கும் மேற்பட்ட துறைகள் உள்ளன. நான்கு ஆண்டு பிஎஸ்சி பாடங்கள் உள்ளன. 20 ஆயிரத்திற்கும் மேற்பட்ட மாணவர்கள் பட்டம் பெற்றுள்ளனர். புதிய பொருட்களை ஆராய்ச்சி செய்ய பல்வேறு தொழில் நிறுவனங்களோடு தொடர்புகொண்டுள்ளது அறிவியல் கழகம்.

சமூகத்திற்கு உதவும் பல்வேறு ஸ்டார்ட் அப் நிறுவனங்களை உருவாக்கவும் இந்திய அறிவியல் கழகத்தில் தனி துறை உள்ளது. இதனை சிட் என அழைக்கின்றனர். இவற்றில் சில நிறுவனங்கள் தேசிய ஸ்டார்ட்அப் விருதுகளை வென்றுள்ளன.

**டைம்ஸ் ஆப் இந்தியா**
**சேட்டன் குமார்**

5

# பொழுதுபோக்குபூங்காகவாக மாற்றப்படும் காந்தியின் சபர்மதி ஆசிரமம்!



2019ஆம் ஆண்டே காந்தியின் சபர்மதி ஆசிரமம் புத்துயிர் அளிக்கப்படும் என ஒன்றிய அரசு கூறி அதற்கான முயற்சிகளை மேற்கொண்டது. ஆனால் இயற்கையான தடையாக கொரோனா வந்தது. இக்காலகட்டத்தில் தங்களுக்கு ஆதரவான பல்வேறு மசோதாக்களை சட்டமாக்கிய பிரதமர் மோடி, இப்போது காந்தியின் பக்கம் கவனம் திருப்பியுள்ளனர்.

1,200 கோடி மதிப்பில் காந்தியின் சபர்மதி ஆசிரமத்தை நவீனப்படுத்தி புதுப்பிக்க உள்ளதாக ஒன்றிய அரசு கூறியுள்ளது. காந்தியை தேசத்தந்தை என்ற இடத்திலிருந்து அகற்றி அதில் ஆர்எஸ்எஸ் பிரிவினைவாதிகளை பொருத்தும் பணியை பாஜக அரசு தொடர்ச்சியாக செய்து வருகிறது. இதற்கு

அச்சாரமாக காந்தியை ஸ்வட்ச் பாரத் திட்டத்தின் அடையாளமாக்கி அசிங்கப்படுத்தியது. காந்தி வெறும் ஒருவரின் தூய்மை பற்றி மட்டும் பேசவில்லை.

ஜனநாயகத்தன்மை, அகிம்சை, சுய ஒழுக்கம் பற்றியெல்லாம் கூட பேசியுள்ளார். இவற்றில் தன்னுடைய பங்கு பற்றி நூல்களைக் கூட எழுதியுள்ளார். ஆனால் அதையெல்லாம் படிக்க தெரிந்துகொள்ள ஒன்றிய அரசுக்கு எந்த விருப்பமுமில்லை. ஈடுபாடும் இல்லை.

சபர்மதி ஆசிரமத்தை ஏழு அறக்கட்டளைகள் நிர்வாகம் செய்து வருகின்றன. இந்த நிலையை சாதகமாக்கி மாநில அரசு மூலம் சபர்மதி ஆசிரமத்தை ஒன்றிய அரசு மாற்றியமைக்க முயன்று வருகிறது. எளிமையாக உள்ள இந்த ஆசிரமத்தை பார்க்க மட்டுமே உலக நாடுகளில் இருந்து ஆண்டுதோறும் தோராயமாக 7 லட்சம் பேர் வந்து போகிறார்கள்.

காந்தியைக் கொன்று அவரின் கொள்கைகளை அழிக்க நினைத்த கட்சி, இன்று அவரின் ஆசிரமத்தை பாதுகாக்கிறேன் என்ற பெயரின் அவரின் பெயரை முழுக்க அழிக்க நினைக்கிறது என்கிறார் நில உரிமை ஆர்வலரான சாகர் ராபாரி. ஆசிரம ம் மேம்படுத்தப் படவேண்டும் என நினைப்பவர்கள் கூட வலதுசாரி அரசு, காந்தியன் கருத்தியலை முற்றாக துடைத்தெறியும் வாய்ப்புள்ளதாக கருத்து தெரிவித்துள்ளனர்.

கடந்த ஆகஸ்ட் 4 அன்று, 130 கல்வியாளர்கள், கல்வி நிறுவனங்கள், காந்தியை பின்பற்றுபவர்கள் ஒரு அறிக்கை ஒன்றை வெளியிட்டனர். அரசு, ஜாலியன் வாலாபாக்கிற்கான நினைவுமண்டபத்தைப் போல சபர்மதி ஆசிரமத்தை மாற்ற வாய்ப்புள்ளது. ஜாலியன் வாலாபாக் நினைவு மண்டபம் வரலாற்று நிகழ்ச்சியை நினைவுகூறும் இடமாக இல்லாமல் தீம் பார்க் போல அரசால் மாற்றப்பட்டுவிட்டது என காட்டமாக விமர்சிக்கின்றனர். அதற்கேற்ப புதுப்பிக்கப்படும் ஆசிரமத்தில் அருங்காட்சியகம், உணவு உண்பதற்கான இடம், வாகனங்களை நிறுத்துவதற்கான இடம், பல்வேறு வணிக நிறுவனங்களின் கடைகள் ஆகியவை அமைக்கப்படவிருப்பதாக ஒன்றிய அரசு கூறியுள்ளது.

இதுதொடர்பாக எழுத்தாளர் அருந்ததிராய், முன்னாள் உயர்நீதிமன்ற நீதிபதி ஏபி ஷா, எழுத்தாளர் நயன்தாரா ஷேகல், சமூக செயல்பாட்டாளர் ஜிஎன் டேவி ஆகியோர் அறிக்கை வெளியிட்டுள்ளனர். இதில், காந்தி ஆசிரம அமைப்புகளை வணிகமயாக்கும் செயல்பாடு தொடங்கப்பட்டுள்ளது. இதற்கு மோசமான எடுத்துக்காட்டாக மகாராஷ்டிராவில் உள்ள சேவாகிராமம் உள்ளது. 1936-1948 ஆண்டுகளில்

காந்தியின் வீடாகவும், ஆசிரமமாகவும் இருந்தது. காந்தியை கொன்ற கருத்தியல் உள்ளவர்கள், இப்போது இரண்டாவது முறையாக அவரை கொலை செய்ய நினைக்கின்றனர் என்று கூறப்பட்டுள்ளது.

காந்தியின் ஆசிரம் ஏற்கெனவே உலகத்தரத்தில்தான் உள்ளது. இப்போது அதனை மாற்றி அமைக்கவேண்டிய அவசியமில்லை. இதனை வடிவமைத்த சார்லஸ் கொரியா, காந்தியின் கொள்கைகளை மனதில் ஏற்றிக்கொண்டுதான் இதனை எளிமையாக வடிவமைத்தார். இப்போது ஆர்எஸ்எஸ் கொள்கைகளால் தாக்கமுற்று, ஆசிரமத்தை மாற்றும் எண்ணம் தவறானது என்று குஜராத்தைச் சேர்ந்த எழுத்தாளர், சமூக ஆர்வலரான ஜிஎன் டேவி கூறினார்.

2

காந்தி ஏன் அமெரிக்கா செல்லவில்லை என்று ஒருமுறை கேட்கப்பட்டது. அதற்கு அவர், அங்கு சென்றால் மக்கள் என்னை நான் யார் என்று பார்ப்பதற்குத்தான் வருவார்கள். என்னைப் பற்றி தெரிந்துகொண்டு கொள்கைகளால் ஈர்க்கப்பட்டு வரவேண்டும். அதனால்தான் அங்கு செல்லவில்லை என்று கூறினார். காந்தியை பற்றி அறிய விரும்புபவர்கள் அங்கு செல்ஃபி எடுப்பதை விட அவர் உலகிற்கு என்ன சொல்ல விரும்பினார். செய்தார் என மக்கள் அறியவேண்டும் என காந்திய அறிஞர்கள் கூறுகிறார்கள்.

முதன்மை செயலரான கைலாசநாதன் காந்தியின் சபர்மதி ஆசிரமத்தை புதுப்பிக்கும் திட்டத்திற்கு பொறுப்பாக இருக்கிறார். இவரின் முதல் பணி, அந்த வளாகத்தில் மூன்று தலைமுறையாக வாழ்ந்து வந்த மக்களை இடம்பெயர்ப்பதுதான். மக்கள் இதற்கு எதிர்ப்பு தெரிவிக்க, அவர்களுக்கு நிரந்தரமாக தங்க வீடு வழங்கப்படும் என்று கூறியிருக்கிறது அரசு.

ஆசிரம் இப்போது இருக்கும் பரப்புடன் கூடுதலாக நூறு ஏக்கர்களை இணைத்து புதுப்பிக்கப் போகிறார்கள். இதற்கு முன்னர் நான்கு முறை புதுப்பிக்க முயன்றும் திட்டம் ஈடேறவில்லை. ஆனால் இம்முறை நிச்சயமாக நிறைவேற்றிவிட ஒன்றிய அரசு உறுதியாக உள்ளது.

அமைதியும் அழகும் கொண்ட இந்த இடத்திற்கு 2014ஆம் ஆண்டு சீன அதிபரை பிரதமர் மோடி அழைத்து வந்தபோது காந்திய அறிஞர்கள் மிரண்டு போனார்கள். விருந்தினரை எதற்காக காந்தி ஆசிரமத்தில் சந்திக்கவேண்டும் என கேள்வி எழுப்பினார்கள். 182 மீட்டரில் சிலை எழுப்பி சர்தார் படேலை காட்சி பொருளாக மாற்றியது போல காந்திக்கு நடக்காமலிருந்தால் பெரிய விஷயம்தான்.

6

## சுதந்திரத்திற்கு பிறகு இந்தியாவில் ஏற்பட்ட பால் தட்டுப்பாடு!



**பால் பொருட்களில் மிட்டாய் செய்யத் தடை!**

1970ஆம் ஆண்டு உத்தரப்பிரதேசத்தில் ஒரு சட்டம் நடைமுறையில் இருந்தது. காவல்துறை அதிகாரி அங்குள்ள எந்த வீட்டிலும் சென்று சோதனையிட அந்த சட்டம் அதிகாரம் வழங்கியது. அப்படி என்ன அங்கு ஊழல் நடந்துவிட்டது? திடீரென இப்படியொரு சட்டத்தை உருவாக்கி இருக்கிறார்கள் என அனைவருக்குமே தோன்றும். அந்த காலகட்டத்தில் பாலின் தேவை அதிகமாக இருந்தது. அதனை பிற மாநிலங்களுக்கு விற்க அல்லது மிட்டாய்களை, இனிப்புகளை செய்ய தடுப்பதே அரசின் நோக்கம்.

சட்டம் அதற்கெனவே உருவாக்கப்பட்டது. கோடைக்காலத்தில் பால் தட்டுப்பாட்டு ஏற்பட பனீர் அல்லது வேறு வகை இனிப்பு பலகாரங்கள் செய்வதைக் கூட அரசு தடுத்திருந்தது. 1956ஆம் ஆண்டு மேற்கு வங்க அரசு மேற்கு வங்க சன்னா சட்டம் என்பதன் பேரில் பாலில் பலகாரங்களை தயாரிப்பதை தடுத்திருந்தது. 1956ஆம் ஆண்டு பஞ்சாப் அரசு, ஜூன் மாதம் பால் பொருட்களில் ஏதேனும் இனிப்புகளை

தயாரிக்கிறார்களா என்பதைக் கண்காணித்து தடுத்த தொடங்கியது.
1969ஆம் ஆண்டு மத்திய அரசு டெல்லி, மீரட், புலந்த்சார் ஆகிய பகுதிகளில் நடைபெறும் திருமண விழாக்களில் பால் பொருட்களில் தயாரிக்கப்பட்ட இனிப்புகளை பரிமாற தடை விதித்தது.
இருபத்தைந்திற்கும் அதிகமான விருந்தினர்களைக் கொண்ட விழாக்களுக்கு இச்சட்டம் கடுமையாக்கப்பட்டது.

இந்தியா இன்று பால் உற்பத்தியில் பெரிய நாடு என்ற பெருமையை பெற்றுவிட்டது. ஆனால் சுதந்திரம் பெற்றபோது நிலைமை தலைகீழாக இருந்தது. அப்போது மக்களில் தலா ஒருவருக்கு 126 கிராம் மட்டுமே பால் கிடைத்தது. அந்தளவு பாலுக்கு தட்டுப்பாடு இருந்தது. சில மாநிலங்களில் ஒருவருக்கு 30 முதல் 50 கிராம் பால் மட்டுமே குடிக்க கிடைத்தது. அப்போது இந்திய அரசு பால் தட்டுப்பாட்டை எப்படி போக்கியது? இறக்குமதி செய்யப்பட்ட பால் பவுடர்களைத்தான் அப்போது அரசு நம்பியது.
இந்த சம்பவங்கள் நடைபெற்ற காலகட்டம் 1952-55 என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

இதுபற்றி மாநிலங்கள் அவையில் விவாதங்கள் வெடித்தன. மேற்கு வங்கத்தில் பால் பவுடர் சப்ளை ஆனது, மிகவும் குறைந்துவிட்டது. குழந்தைகளுக்கும் தாய்மார்களுக்கும் அடுத்தமாதமே தருவதற்கு பால் பவுடர் இல்லை என்று புகார் கூறினார் நிரன் கோஷ். இதற்கு பதில் அளித்தார் சுகாதாரம் மற்றும் குடும்பநலத்துறை அமைச்சர் எஸ் சந்திரசேகர்..,,,
எனக்கு தெரியும் சார்...பீகாரில் பஞ்சம் காரணமாக பால் பவுடர் சப்ளையில் பெரும்பகுதியை அங்கு அனுப்பியிருக்கிறோம். அங்கு வழங்கப்பட்டிருப்பதும் குறைந்த அளவு பொருட்கள்தான்.
குழந்தைகளுக்கும், தாய்மார்களுக்கும் சிறுவர்களுக்கு மட்டும் பால் பவுடரை வழங்கியுள்ளோம் என்றார்.

மாநிலங்கள் முழுக்க தட்டுப்பாடு நிலவியதால், மாநில அரசுகளும், மத்திய அரசும் பாலை வேறு பயன்பாட்டுக்கு பயன்படுத்த அனுமதிக்கவில்லை. பால் பொருட்களில் தயாரித்த இனிப்புகளை ஆடம்பர பொருள் என்றே விவசாயத்துறை அமைச்சர் அன்னாசாகேப் ஷிண்டே கூறினார்.
தொண்ணூறுகளில் இந்தியாவில் பால் உற்பத்தி அதிகரிக்கத் தொடங்கியது. அதன்பிறகுதான், விவசாயத்துறை அமைச்சர் லென்கா, இனி பாலை பால் பவுடர் ஆக்கவும் கண்டென்ஸ்டு பால் ஆக்கவும் தடை நீடிக்கிறது என்று அறிவித்தார். முப்பது ஆண்டுகளுக்கு பிறகு பலருக்கும் அன்றிருந்த பால் தட்டுப்பாடு தெரியாது.
**டைம்ஸ் ஆப் இந்தியா**

7

## நாற்பது ஆண்டுகளுக்கு முன்னர் நிஜமான நடுத்தர வர்க்க கனவு!



இந்தியாவில் தொண்ணூறுகளில்தான் தாராளமயமாக்கல் தொடங்கியது என்று கூறுகிறார்கள். உண்மையில் இதற்கான முன்னேற்பாடுகள் 1980களிலேயே தொடங்கிவிட்டன. இதனை தொடங்கியவர் பிரதமராக இருந்த இந்திராகாந்தியின் மகன் சஞ்சய் காந்தி.

இவர் நடுத்தர வர்க்க மக்கள் வாங்கும்படியான காரை தயாரிக்க விரும்பினார். இப்படித்தான் மாருதி உத்யோக் நிறுவனம் தொடங்கப்பட்டது. இன்று இந்த நிறுவனம் மாருதி சுசுகியாக மாறிவிட்டது.

சஞ்சய் காந்தியின் கனவு இன்று நிஜமானாலும் கூட அதைப் பார்க்கும்வரை அவர் உயிரோடு இல்லை. 1980ஆம் ஆண்டு விமான விபத்தில் சஞ்சய் காந்தி இறந்துவிட்டார். இந்திய அரசு ஜப்பானைச் சேர்ந்த சுசுகி மோட்டார் நிறுவனத்துடன் இணைந்து மாருதி காரைத் தயாரித்தது.




ஹர்பால்சிங் தனது காருடன்..

கார் எளிமையாக இருக்கவேண்டும். விலையும் பாக்கெட்டை ஓட்டையாக்காமல் இருந்தால் நல்லது என்ற விஷயங்களை மனதில் வைத்துக்கொண்டு உருவாக்கினார்கள். டெல்லியில் அதன் விலை 52, 500ஆக இருந்தது. 1983ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் தொடங்கிய முன்பதிவு விறுவிறுவென பிரமாதமாக இருந்தது. 1.35 லட்சம் பேர் மாருதியை வாங்க ஆர்வமாக இருந்தனர். தயாரிக்கப்பட்ட கார்கள் அதே ஆண்டில் டிசம்பர் 14ஆம் தேதி மக்களுக்கு வழங்கப்பட்டன. டிசம்பர் 14 என்பது சஞ்சய் காந்தியின் பிறந்த நாளாகும்.

இந்திராகாந்தி, மாருதி காரை வாங்கிய பயனாளர்கள் பத்து பேருக்கு தானே கார் சாவியை முன்நின்று வழங்கினார். அவரிடம் மாருதி 800 காரை வாங்கியதில் முக்கியமானவர், இந்தியன் ஏர்லைன்ஸ் ஊழியரான ஹர்பால் சிங் . இவர் 2010ஆம் ஆண்டு தான் இறக்கும்வரை மாருதி 800 யை கைவிடாமல் பயன்படுத்தி வந்தார். மாருதி காரை வாங்க தனது ஃபியட் காரை விற்றார். அப்போது மக்களிடம் பிரபலமாக இருந்தது அம்பாசிடர் , பிரீமியர் பத்மினி கார்கள்தான். எனவே மாருதி 800 என்பது அனைவரையும் ஆச்சரியப்படுத்தியது. மாருதி வெற்றிபெற்றது கார் விற்பனையால் கிடையாது. அதன் பராமரிப்புக்காக சுசுகி நிறுவனம் காட்டிய அக்கறைதான். இன்றும் கூட மாருதி கார்களுக்கான சேவை மையங்கள் பிற கார் நிறுவனங்களை விட அதிகமாக உள்ளது.

"அப்போது இந்தியாவில் சோசலிசம்தான் இருந்தது. கார் என்பதை மக்கள் பெரிய ஆடம்பரமாக பார்த்தனர். இதனை தொடங்குவதில் ஆர்வமாக இருந்த சஞ்சய் காந்தி, திடீரென காலமானதால்,சிறிய காரை உருவாக்கி கொண்டு வரவேண்டும் என பிரதமர் இந்திராகாந்தி விரும்பினார். இதனால்தான் மாருதி கார் உருவானது. சிறிய கார் என்பது விபத்தாக உருவாக்கப்படவில்லை. இந்தியாவில் அப்போது தனியார் நிறுவனங்கள் வாகனத்துறையில் பெரிதாக வளர்ந்திருக்கவில்லை. அதனை லாபமான துறையாகவும் பார்க்கவில்லை" என்கிறார் மாருதியின் நான் எக்ஸ்கியூடிவ் தலைவரான ஆர்.சி.பார்க்கவா. இவர் மாருதி உருவான நாள்தொட்டு நிறுவனத்தில் பல்வேறு பதவிகளைப் பெற்று வளர்ந்துள்ளார்.

சஞ்சயின் கனவு என்பதால் மாருதிக்கு மட்டும் சில பாகங்களை இறக்குமதி செய்ய வரிவிலக்கு தரப்பட்டது. மேலும் நிறுவனத்தில் வெளிநாட்டு முதலீடு 40 சதவீத த்திற்கும் அதிகமாக இருக்க அனுமதிக்கப்பட்டது. அன்றைய சூழலில் இருந்த நிறுவனங்கள் அரசுக்கு சொந்தமானவை. அதில் அந்நிய முதலீடுகள் அனுமதிக்கப்படவில்லை. மாருதிக்கு கொடுத்த சிறப்பு சலுகைகளை ப்ரீமியர் ஆட்டோமொபைல்ஸ், இந்துஸ்தான் மோட்டார்ஸ் ஆகிய நிறுவனங்கள் கடுமையாக ஆட்சேபித்தன. அதையும் மீறித்தான் மத்திய அரசு மாருதி நிறுவனத்திற்கு உதவிகளை செய்தது.

மாருதி கார் திட்டத்தை இந்தியாவில் மட்டுமல்ல வெளிநாடுகளிலும் கூட அரசியல் திட்டமாகத்தான் பார்த்தனர். கார் விற்பனையில் சாதனை படைக்கும் என்பதை யாருமே எதிர்பார்க்கவில்லை. மக்கள் ஏகோபித்த ஆதரவைக் கொடுத்து அதனை ஆதரித்தனர். அப்போது பிரபலமாக இருந்த அம்பாசிடர் பெரிதாக இருந்தது. மாருதி சிறிய காராக இருந்தது. ஆற்றல் வாய்ந்த இஞ்சினும் அதனை மக்கள் ஆர்வமாக வாங்க முக்கியமான காரணம். ஒருகட்டத்தில் மாருதி காரை வாங்கி வீட்டில் நிறுத்துவது ஒருவரின் அந்தஸ்தாக மாறியது. ஏறத்தாழ இப்போதுள்ள நிலையை ஒப்பிட்டால் மெர்சிடஸ் காரை வாங்கி வாசலில் நிறுத்தி வைப்பது போன்றது அது.

இன்றும் மக்கள் மாருதி 800காரை விரும்புகின்றனர். மொத்தம் 27 லட்சத்திற்கும் மேற்பட்ட கார்களை மாருதி சுசுகி விற்றது. இப்போது மாசுக்கட்டுப்பாட்டு விதிகள் நிறைய வந்துவிட்டன. காருக்கு தேவையான அத்தனை வசதிகளையும் மாருதி செய்துகொடுத்துக்கொண்டுதான் வந்தது. 2014ஆம் ஆண்டுதான்

மாருதியை விற்பனை செய்வதை நிறுத்திக்கொள்ளலாம் என மாருதி சுசுகி நிறுவனம் முடிவெடுத்தது. இப்போது அந்த இடத்தில் மாருதி ஆல்டோ உள்ளது. அன்னபூர்ணா ஸ்டூடியோஸ் படங்களில் ஏஎன்ஆர் லிவ்ஸ் ஆன் என்று போடுவார்கள். அதேபோல் சொல்லவேண்டுமென்றால், இந்திய வாகனத்துறையில் மாருதி 800 முக்கியமான புரட்சியைச் செய்த கார். எப்போதும் நமது நினைவில் மறையாமல் வாழும்.

**டைம்ஸ் ஆப் இந்தியா**
**பங்கஜ் தோவல்**

8

# மாருதி 800 கார் உருவாக்கம் சஞ்சய் காந்தியின் கனவா?



இந்திய அரசு, 1950களில் மக்களுக்கான சிறிய காரை உருவாக்க வேண்டும் என நினைத்தது. ஆனால் அப்போது நிறைய விதிமுறைகள் இருந்ததால் ஐடியாக்கள் காகிதங்களோடு அப்படியே மூடி வைக்கப்பட்டன. கார்களை தயாரிப்பதற்கான தொழில்நுட்பம் இல்லாத காரணத்தால் தொழில்நுட்பத்தை இறக்குமதி செய்யவேண்டும். அல்லது வெளிநாட்டு நிறுவனத்துடன் ஒன்றாக இணையவேண்டும் என்ற சூழல் இருந்தது.

அரசு, தனியார் கார் தயாரிப்பு நிறுவனங்களை அழைத்து கார் தயாரிப்புக்கான உரிமங்களை தருகிறோம் என்று கூறியது. இதற்கு பதினெட்டு நிறுவனங்கள் விண்ணப்பித்தன. டெல்கோ என்ற நிறுவனம் முக்கியமானது. இன்றைய டாடா மோட்டார்ஸ் நிறுவனம்தான் அது.
ஆனால் சஞ்சய் காந்திக்கு வேறு எண்ணங்கள் இருந்தன. அவரைப் பொறுத்தவரை கார்களின் தயாரிப்பு அவரது கட்டுப்பாட்டில் இருக்கவேண்டுமென நினைத்தார். வெளிநாட்டில் இருந்தபோது, ரோல்ஸ்ராய்ஸ் நிறுவனத்தில் படித்தார் என்று கூறப்பட்டது. பின்னாளில் அந்நிறுவனம், இயந்திர பொறியியலில் சஞ்சய்க்கு குறைந்த திறமையே இருந்தது. அவருக்கு அதைக் குறிப்பிட்டுத்தான் சான்றிதழ் வழங்கினோம்

என்று கூறியது.

பழைய டெல்லி அருகே வாடகைக்கு காரேஜ் ஒன்றை சஞ்சய் வாங்கி வைத்திருந்தார். அங்குதான் அவருக்கு விலை குறைவான காரை உற்பத்தி செய்யும் எண்ணம் வந்திருக்கவேண்டும். தனது இருபது வயதிலேயே வாகனங்களைஉற்பத்தி செய்யும் திறமை இருக்கிறதோ இல்லையோ 297 ஏக்கர்களை வாங்கிவிட்டார். குர்கான் அருகே ஏக்கருக்கு 12 ஆயிரம் கொடுத்து வாங்கியிருந்தார். அங்குதான் மாருதி தொழிற்சாலையை உருவாக்க நினைத்தார். ஒரு காரை எட்டாயிரம் ரூபாய்க்கு விற்பதுதான் கனவு. 1975ஆம் ஆண்டு ஷோரூம் விலை 16,500 ஆக காரின் விலை உயர்ந்தது. ஹரியானாவில் அதன் விலை ரூ.21,000 ஆக இருந்தது. அப்படி இருந்தாலும் கூட அப்போது சந்தையில் இருந்த கார்களின் விலையை விட ஐந்தாயிரம் முதல் பத்தாயிரம் வரை குறைந்து இருந்தது.

ஆனாலும் கூட சஞ்சயின் கார் ஷோரூமுக்கு வரவேயில்லை. மாதம் 12 முதல் 20 கார்கள் வரை தயாரித்து வருகிறோம் என்று சொன்னார். நான்கே ஆண்டுகளில் இதன் எண்ணிக்கை 200ஆகும் என்றார். 1976ஆம் ஆண்டு மார்ச் 31தான் உண்மையான உற்பத்தி தொடங்கியது. 21 கார்கள்தான் முதலில் தயாரிக்கப்பட்டன. 1975ஆம் ஆண்டு ஜூன் மாதம், நாடு முழுக்க அவசரநிலை சட்டம் பிறப்பிக்கப்பட்டது. இதனால் சஞ்சய்க்கு கார் தயாரிப்பை பார்க்க நேரம் கிடைக்கவில்லை. எனவே அரசியலுக்கு மாறினார். அப்போதும் மாருதியின் நிர்வாகத் தலைவராக மாதம் 4 ஆயிரம் ரூபாய் சம்பளம் வாங்கிக்கொண்டிருந்தார்.

1977ஆம் ஆண்டு அரசியலில் இந்திராகாந்திக்கு இறங்குமுகமாக இருந்தது. தேர்தலில் தோற்றவர், பிறகு 1980ஆம் ஆண்டு மீண்டும் ஆட்சிக்கு வந்தவர் மாருதியை தனது மகனின் கனவு என அடையாளம் கண்டு திரும்ப அதனை எடுத்தார். 1980, அக்டோபர் 13 அன்று நிறுவனத்தை செயல்பாட்டிற்கு கொண்டுவர சட்டம் ஒன்றை உருவாக்கினார். அடுத்த மூன்று ஆண்டுகளில் கார் நிறுவனம், செயல்பாட்டிற்கு வந்து மாருதி 800 சந்தைக்கு வந்தது. சுசுகி நிறுவனத்தின் உதவியுடன் மாருதி வெற்றி பெற்றது. ஆனால் சஞ்சயின் கனவுக்காருக்கான விஷயங்கள் அதில் ஏதும் இடம்பெறவில்லை.

**டைம்ஸ் ஆப் இந்தியா**

9

# முரண்டு பிடித்த மாநிலங்களை இணைந்து இந்திய ஒன்றியமாக்கிய வல்லபாய் படேல்!



இந்தியா பிரிட்டிஷ் நாட்டின் காலனி ஆதிக்கத்தில் இருந்தபோது, 500 மாநிலங்களாக பிரிக்கப்பட்டிருந்தது. சுதந்திரத்திற்கு பிறகு இந்த மாநிலங்கள் ஒன்றாக சேர்க்கப்பட வேண்டிய தேவையிருந்தது. மாநிலங்களுக்கு முன்னர் இரண்டு வாய்ப்புகள் இருந்தது. அவை, இந்தியா மற்றும் பாகிஸ்தான் என்று இரு நாடுகள். மாநிலங்கள் யாருடன் சேர்கிறார்கள் என்பது அவர்களது விருப்பம். உள்துறை அமைச்சராக இருந்த சர்தார் வல்லபாய் படேல் தனது சாதுரியத்தால் பெரும்பாலான மாநிலங்களை இந்திய ஒன்றியத்துடன் இணைத்தார். ஆனாலும் சிக்கல் வந்த மாநிலங்கள் இருந்தன அவற்றைப் பற்றி பார்ப்போம்.

**ஹைதராபாத்**

இந்தியா, சுதந்திரம் பெற்றபிறகு ஹைதராபாத் மாநிலம் அதனுடன் இணைய மறுத்தது. பிரிட்டிஷ் காலத்தில் இருந்தபோது போலவே இறையாண்மை கொண்ட மாநிலமாக ஹைதராபாத் இருக்கவேண்டுமென அதன் நிஜாம் நினைத்தார். ஹைதராபாத் நிலப்பரப்பு ரீதியாக வட இந்தியா மற்றும் தென்னிந்தியாவிற்காக வாசல் என்பதால் இந்திய அரசு இதனை முக்கியமான மாநிலமாக பார்த்தது. இந்திய அரசு மாநிலங்களுக்க சட்டரீதியான ஆவணங்களை வழங்கி அதில் கையெழுத்து போட்டு இந்திய ஒன்றியத்துடன் சேர்த்து வந்தது. ஹைதராபாத் இந்த ஒப்பந்தத்தை கையெழுத்திட்டு சேர காலம் தாழ்த்தி

வந்தது. இந்த நிலையில் அங்கு கம்யூனிஸ்டுகளில் வளர்ச்சி அதிகரித்து வந்தது. மதவாத கலவரங்களும் தொடங்கி நடந்து வந்தன. இதனால் இந்திய அரசு ஆபரேஷன் போலோ என்ற திட்டத்தை தொடங்கி ராணுவத்தை ஹைதராபாத்திற்கு அனுப்பி வைத்தது. 1948ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் எடுக்கப்பட்ட நடவடிக்கையால் ஹைதராபாத் இந்திய ஒன்றியத்துடன் இணைக்கப்பட்டது.

**ஜூனாகத்**

சுதந்திரத்திற்கு பிறகு ஜூனாகத்தின் நிஜாம், பாகிஸ்தானுடன் இணைய நினைத்தார். இந்த மாநிலத்தில் இந்துகள் பெரும்பான்மையாக இருந்தனர். இந்திய அரசு நிஜாமின் முடிவைப் பார்த்து அதிர்ச்சி அடைந்தது. இதனால் அங்கு மதரீதியான கலவரம் ஏற்படும் என நினைத்து தனது படைகளை ஜூனாகத் மாநிலத்தை சுற்றி நிறுத்தியது. மாநிலத்திற்கு கிடைத்து வந்த உணவுப்பொருட்களை நிறுத்தியது. இந்திய அரசின் முடிவால் நிஜாம், அங்கிருந்து தப்பியோடி பாகிஸ்தானிலுள்ள கராச்சிக்கு சென்றுவிட்டார். 1948ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் ஜூனாகத் மாநிலம் மக்களின் 90 சதவீத வாக்குடன் இந்திய ஒன்றியத்துடன் இணைந்தது.

**இந்தூர்**

இந்தூர் மாநிலம், ஆகஸ்ட் 15க்கு முன்னதாகவே இந்திய ஒன்றியத்துடன் இணைய முடிவெடுத்துவிட்டது. ஆனால் மகாராஜா ஹோல்கர் இதற்கு சரி என்று சொன்னது இந்தியா சுதந்திரம் பெற்ற பிறகுதான்.

**அவுத்**

உத்தரப்பிரதேசத்தில் இருக்கும் பகுதி. 1857ஆம் ஆண்டு புரட்சிக்கும் பிறகு பிரிட்டிஷ் அரசில் இணைந்தது. வாஜித் அலி ஷாவின் பேரன் யூசுப் மிர்ஷா இதனை ஆட்சி செய்து வந்தார். ஆங்கிலேயர்கள் இவருக்கு இறையாண்மை மிக்க மாநில அந்தஸ்து தருவதாக கூறியிருந்தனர். சுதந்திரத்திற்கு பிறகு இந்த மாநிலமும் இந்தியாவுடன் இணைக்கப்பட்டது.

**திருவனந்தபுரம்**

1946ஆம் ஆண்டு திருவனந்தபுரம் திவான், பிரிட்டிஷ் ஆட்சி கலைந்தாலும் கூட மாநிலம் தனிச்சுதந்திரம் கொண்டதாக இருக்கவேண்டும் என நினைத்தார். இதற்காக பாகிஸ்தான், இந்தியா ஆகிய நாடுகளுடன் ஒப்பந்தங்களையும் செய்ய நினைத்தார். முகமது அலி ஜின்னாவும் இதனை ஏற்றுக்கொண்டார். ஆனால் அப்போது பார்த்து சோஷலிஸ்ட் கட்சியைச் சேர்ந்த நபரால் திவான் மீது கொலைத்தாக்குதல் நடத்தப்பட்டது. அதில் பிழைத்தவர், இரண்டில் ஒன்று என முடிவெடுத்து இந்தியாவுடன் சேர்ந்துவிட்டார்.

**போபால்**

போபாலைச் சேர்ந்த நிஜாம், முகமது அலி ஜின்னாவின் நண்பர். இந்துக்களை பெரும்பான்மையாக கொண்ட மாநிலம் என்றாலும் கூட அவர் முஸ்லீம்களுக்கு ஏதாவது பிரச்னை ஏற்பட்டுவிடும் என்பதால் இந்தியாவுடன்இணைய பயந்தார். முக்கியமான பிரச்னை, அவர் காங்கிரஸை தனது எதிரியாக பார்த்தார். சுதந்திரம் பெற்ற பிறகு இந்தியா இடதுசாரி நாடாக மாறிவிடும் என்று பயந்துகொண்டிருந்தார். நிஜாமின் பயத்தைப் பார்த்து மௌண்ட்பேட்டன் கடிதம் ஒன்றை எழுதினார். பிறகு பிற மாநிலங்கள் இந்தியாவுடன் இணைவதையும் பார்த்து மனதை மாற்றிக்கொண்டார். இந்தியா சுதந்திரம் பெற்றபிறகு  பத்து நாட்கள் முழுதாக யோசித்து முடிவுக்கு வந்து இணைந்தார்.

ஜோத்பூர்

இந்த மாநிலத்தில் இந்துக்கள்தான் அதிகம் இருந்தனர். இந்து ஆட்சியாளர்தான் ஆண்டார். 1947ஆம் ஆண்டு ஜூலையில் பாகிஸ்தானுடன் சேரும்படி கேட்டபோது மறுத்துவிட்டார். இந்தியாவுடன் சேரும் முடிவுடன்தான் இருந்தார். ஆனால் இந்திய ஒன்றியத்துடன் ஜோத்பூர் சேருமா இல்லையா என்ற பதற்றம் நிலவியதால் எல்லைப்புற மாநிலங்கள் பாகிஸ்தானுக்கு ஆதரவாக மாறிக்கொண்டிருந்தன. அப்போது அங்கு வந்த சர்தார் வல்லபாய் படேல், நீங்கள் அப்படி பாகிஸ்தானோடு இணைந்தால் மத ரீதியான கலவரங்களை சந்திக்கும்படி சூழ்நிலை இருக்கும் என எச்சரித்தார். இதனால் மன்னர், மாநிலத்தை இந்தியாவுடன் இணைத்தார்.

**டைம்ஸ் ஆப் இந்தியா**

10

# இந்தியாவின் முதல் கேபினட் அமைச்சரவை! - பதினான்கு உறுப்பினர்கள்





இந்தியாவின் முதல் கேபினட் அமைச்சரவை

ஜவகர்லால் நேரு
பிரதமர்
நவ.14, 1889 - மே 27, 1964

சர்தார் வல்லபாய் படேல்
உள்துறை, தகவல் மற்றும் ஒளிபரப்புத்துறை
அக்.31, 1875 - டிச. 15, 1950

ஆர்.கே. சண்முகம் செட்டி
நிதித்துறை
அக்.17, 1892 - மே 5, 1953

சர்தார் பல்தேவ் சிங்
பாதுகாப்புத்துறை
ஜூலை 11, 1902 - ஜூன் 29, 1961

ராஜேந்திர பிரசாத்
விவசாயம் மற்றும் உணவு
டிச.3, 1884 - பிப்.28, 1963

மௌலானா அபுல்கலாம் ஆசாத்
கல்வித்துறை
நவ.11, 1888 - பிப்.22, 1958

ஜான் மத்தாய்
ரயில்வே மற்றும் போக்குவரத்துத்துறை
ஜன் 10, 1886 - நவ.2, 1959

பி.ஆர். அம்பேத்கர்
சட்டம்
ஏப்ரல் 14, 1891 - டிச.6, 1956
ஜெகஜீவன்ராம்
தொழிலாளர் துறை
ஏப்.5, 19008 - ஜூலை 6, 1986

சிஹெச் பாபா
வணிகத்துறை
ஜூலை 22, 1910, ஜூலை 29, 1986

ரஃபி அஹ்மத் கித்வால்

தகவல்தொடர்பு
பிப்.18, 1894 - அக்.24, 1954

ராஜகுமாரி அம்ரித் கௌர்
சுகாதாரத்துறை
பிப்.2, 1887 - பிப்.6, 1964

சியாம பிரசாத் முகர்ஜி
தொழில்துறை மற்றும் விநியோகம்
ஜூலை 6, 1901 - ஜூன் 23, 1953

என்வி காட்கில்
மின்சாரம் மற்றும் சுரங்கம்
ஜன் 10, 1896 - ஜன் 12, 1966

**டைம்ஸ் ஆப் இந்தியா**

11

# இந்தியப் பொருளாதாரத்தை வாழ வைக்கும் ஐஐடி!



இந்தியாவின் ஜனநாயக சிற்பிகளில் ஒருவரான நேரு, அடிக்கல் நாட்டி எழுப்பிய ஐஐடிகள், முக்கியமான கல்வி நிறுவனங்களில் ஒன்றாக உள்ளன. இதில் படித்து நிறைய மதிப்பெண்களை எடுப்பவர்கள் வெளிநாடுகளில் மதிப்புமிக்க பணிகளில் உள்ளனர். இந்த கல்வி நிறுவனங்களின் பொருளாதார மதிப்பு பத்து ட்ரில்லியன்கள் என மதிப்பிட்டுள்ளனர். ஐஐடிகான பணிகள் 1950களில் தொடங்கியது.

1951இல் காரக்பூர் ஐஐடி தொடங்கப்பட்டது. இன்று அந்த நிறுவனம்




தொடங்கி எழுபது ஆண்டுகளுக்கு மேலாகிறது. முதலில் இங்கு பொறியியல் கல்லூரியை தொடங்கவேண்டும் என்பதுதான் நோக்கமாக இருந்திருக்கிறது. பிரிட்டிஷாரின் காலத்தில், எதிர்கால இந்தியாவின் வளர்ச்சி என்பது தொழில்நுட்பமாகவே இருக்கும் என கணித்திருக்கின்றனர். அப்போதைய வைசிராயின் கௌன்சிலில் இடம்பெற்ற உறுப்பினர் ஆர்டெசிர் தலால் இதனை எழுதியிருக்கிறார்.

உலகப்போர் 2 முடிந்தபிறகு, நளினி ரஞ்சன் சர்க்கார் கமிட்டி தொழில்நுட்ப கழகங்களை அமைக்கவேண்டும் என்று அறிக்கையை அரசிடம் சமர்ப்பித்தனர். சுதந்திரம் பெற்றபிறகு, நேரு தொழில்நுட்ப கழகங்களை உருவாக்க வேகம் காட்டினார். அறிவியல் மற்றும் புதிய கண்டுபிடிப்புகள் மூலம்தான் இந்தியா தற்சார்பான நாடாக மாறும் என்று கூறினார். பிறகுதான் முதல் ஐஐடி காரக்பூரில் ஹிஜ்லி எனுமிடத்தில் உருவானது.

ஐஐடியை உருவாக்குவது என முடிவு செய்து அதனை தொடங்கிவிட்டாலும் ஆசிரியர்களை தேடுவது பெரிய பிரச்னையாக இருந்திருக்கிறது. பேராசிரியர் தீபக் பதக் முதுநிலையை முடித்திருந்தார். அவரை ஐஐடியில் ஆசிரியராக நியமனம் செய்தனர். ஆசிரியராக பணியாற்றிக்கொண்டே பிஹெச்டி படிப்பை முடித்திருக்கிறார். அப்போது கல்வி அறிவில்லாதவர்கள் மாணவர்களுக்கு கற்பிக்கின்றனர் என்று பலரும் எங்களை வசைபாடினர் என்கிறார்.

இந்திய அரசு கையாலாகாமல் ஒன்றும் நின்றுவிடவில்லை. ஏராளமான வெளிநாட்டு ஆசிரியர்களை இந்திய தொழில்நுட்ப கழகத்திற்கு அழைத்து வந்து கற்பித்தலை செய்தது. அப்போதுதான் இப்படி கல்வி நிறுவனம் ஒன்றை நடத்துவதற்கு எந்தளவு செலவாகிறது என அரசு உணர்ந்துகொண்டது. 1960ஆம் ஆண்டு பெர்க்கிலியில் இருந்து ஹாரி ஹஸ்கி இந்தியாவிற்கு வந்தார். கணினிகளின் பயன்பாட்டை மாணவர்களிடம் அறிமுகப்படுத்தினார். பிறகு பேராசிரியர் கிளே பெரி என்பவர் வருகை தந்தார்.

சோவியத் ரஷ்யாவின் உதவியுடன் ஐஐடி பாம்பே 1958இல் கட்டப்பட்டது. அமெரிக்கா மற்றும் ஜெர்மனியின் உதவி, ஆதரவுடன் கான்பூர், சென்னை ஐஐடி க்கள்(1959) உருவாயின. ஐஐடி டெல்லியை உருவாக்க இங்கிலாந்து நாடு உதவிகளை வழங்கியது. இன்று இந்தியாவில் 23 ஐஐடி கள் செயல்பட்டு வருகின்றன.

முன்னர், ஐஐடிகளில் இளநிலை பெற்று பிறகு வெளிநாடுகளுக்கு சென்று படித்துவிட்டு வந்து வேலையில் அமர்வார்கள். இப்போது மாஸ்டர் டிகிரியை ஐஐடிகளிலேயே படிக்கலாம். கூடுதலாக படிக்க வெளிநாடுகளுக்கு செல்லலாம். 2006ஆம் ஆண்டு 3.989 மாணவர்களில் 23 பேர் மட்டுமே வெளிநாடுகளுக்கு மேற்படிப்பிற்கு சென்றுள்ளனர். இதில் முக்கியமான பிரச்னை ஒன்றுள்ளது. அதுதான் ஆராய்ச்சிகள். என்னதான் ஆராய்ச்சி செய்து ஆய்வறிக்கைகளை வெளியிட்டாலும் கூட தொழில்துறை சார்ந்த ஆராய்ச்சிகளில் மாணவர்களை இணைப்பது பற்றி இன்னும் முடிவெடுக்கவில்லை.

அமைச்சகத்திடம் இதுபற்றியும் ஐஐடியினர் தெரிவித்துள்ளனர். ஆனாலும் இதனை சரிவர ஊக்கம் கொடுத்து செயல்படுத்த முடியவில்லை.

மத்திய அரசு கொடுக்கும் நிதியில்தான் ஐஐடிகள் உயிர்வாழ்கின்றன. பெரு நிறுவனங்கள் சிஎஸ்ஆர் நிதியினை ஐஐடிகளுக்கு வழங்கலாம் என விதிகள் மாற்றப்பட்டபிறகு ஆராய்ச்சி, ஸ்டார்ட்அப் நிறுவனங்கள் உருவாகத் தொடங்கியுள்ளன. இப்போது கடற்படை, ராணுவ ஆராய்ச்சி மையம், இஸ்ரோ ஆகிய அமைப்புகளுக்கு பல்வேறு தொழில்நுட்பங்களை ஐஐடிகள் வழங்கி வருகின்றன.

முதலில் ஐஐடியில் கல்விக்கட்டணம் ரூ.500 ஆக இருந்தது. இப்போது ரூ.2 லட்சமாக உயர்ந்துள்ளது. ஏன் இந்த கட்டண உயர்வு என்றால், நாங்கள் அரசிடம் மானியம் பெற்றுத்தான் செலவுகளை செய்கிறோம், மாணவர்களிடம் பெறும் தொகை வெறும் 7 சதவீதம்தான் எங்களுக்கு உதவுகிறது என சொல்கிறார் ஐஐடி இயக்குநர் ராம்கோபால் ராவ்.

இப்போது ஐஐடியில் இடம்பிடிக்க மாணவர்கள் பல்வேறு கோச்சிங் சென்டர்களுக்கு சென்று படித்து வெல்கிறார்கள். அன்று, மாணவர்கள் பள்ளி பாடங்களை தாங்களே படித்து புரிந்துகொண்டு தேர்வை எதிர்கொள்வதுதான் முறையாக இருந்தது. பிறகுதான், ஐஐடிகளில் இட ஒதுக்கீடு முறை அமலுக்கு வந்தது. 2008இல் பிற்படுத்தப்பட்டோருக்கான ஒதுக்கீடு மேம்படுத்தப்பட்டது. இந்தளவு மாணவர்களுக்கு ஏற்றபடி வகுப்பு, ஆய்வகம், விடுதிகள் இல்லை என்பதை கவனத்தில் கொள்வது முக்கியம்.

2000ஆம் ஆண்டில் ஐஐடியில் படித்த மாணவர்கள் கோடி ரூபாய் மதிப்பிலான பணி ஆணையைப் பெற்று வெளியே வந்தனர். பிறகு இந்த மாற்றம் மெல்ல தேக்கத்தை சந்தித்தது. இப்போது அனைத்து ஐஐடி க்குமான வேலைவாய்ப்பு கமிட்டி அமைக்கப்பட்டுள்ளது. இதன் வழியாக வேலைவாய்ப்பு நேர்காணல்கள் நடத்தப்படுகின்றன.

**டைம்ஸ் ஆப் இந்தியா**

12

# பாரதமாதாவின் ராஜபுத்திரனுக்கு இந்திய வரலாற்றில் இடம் கிடையாது!



பாரதமாதாவின் ராஜபுத்திரன். இப்படி சொன்னது காங்கிரசைச் சேர்ந்த தலைவர்கள் அல்ல.

நேருவின் காலத்தில் அவரது கொள்கைகளை எதிர்த்த, ஆனால் அவரின் செயல்பாடுகள் மீது நம்பிக்கை கொண்ட முன்னாள் பிரதமர் அடல் பிகாரி வாஜபாய். உடனே இன்றைய பிரதமர் மோடி போலத்தானே வாஜ்பாயும் கூறியிருக்கிறார் என்று நினைத்துக்கொள்ளாதீர்கள். அவர் கூறியது பாரதமாதாவின் ராஜபுத்திரன் என்று மட்டுமே. இந்திய வரலாற்றில் இடம் கிடையாது என்று தனது செயல்கள் வழியாக கூறியிருப்பது தற்போதைய ஒன்றிய அரசு.

இந்தியா தனது 75 ஆவது ஆண்டு சுதந்திர தினத்தை கொண்டாடி வருகிறது. இதற்கான போஸ்டர்களில் சுதந்திர இந்தியாவின் முதல் பிரதமருக்கு இடமில்லை என்பது அனைத்து இடங்களிலும் சர்ச்சையாகி வருகிறது. நேருவுக்கு பதில் ஆங்கிலேயரை ஆதரித்த, சிறையில் இருந்தபோது மன்னிப்பு கடிதம் எழுதி தன்னைக் காப்பாற்றிக்கொண்ட சங் பரிவார் தலைவர்களை போஸ்டர்களில் இடம்பெறச் செய்து வருகிறது ஒன்றிய அரசு.

யாருக்கு யார் முக்கியமோ அவர்களை பதவியில் அமர்த்தலாம். ஆனால் வரலாற்றில் அப்படியான வசதிகள் கிடையாது. சுதந்திர இந்தியாவில் முதல் பிரதமராக அமர்ந்த நேருவை பற்றி பேசும்போது அவரின் தனிப்பட்ட விஷயங்களைப் பேசி களங்கப்படுத்துகிறார்கள். அப்படியில்லாதபோது சீனக்கொள்கை, காஷ்மீர் சிறப்பு அந்தஸ்து விவகாரங்களில் அவரின் நிலைப்பாடு, அதில் இந்தியா தோற்றுப்போனது பற்றி பேசுகிறார்கள்.
தவறுகள் செய்யாத அரசியல் தலைவர்களே கிடையாது. இந்தியாவின் 75ஆவது சுதந்திர தினத்தில் நாடு பற்றிய பெருமிதமான தருணங்களை பேசவேண்டும். ஒரு தலைவரின் தனிப்பட்ட, அரசியல்ரீதியான தோல்விகளை பேசுவது என்பது மாண்புமிக்க செயல்பாடு கிடையாது.

இன்று நாடாளுமன்றத்தில் எந்த விவாதங்களுமின்றி மசோதாக்கள் சட்டமாகின்றன. நாம் நினைத்த விஷயங்கள் அப்படியே நடக்கவேண்டும் என்ற அவசியம் கிடையாது என்று நினைத்த நேரு தனது

அமைச்சரவையில் தனது கருத்துக்கு எதிரான கருத்துகளை கொண்ட ஜனசங்கத்தின் ஷியாம பிரசாத் முகர்ஜியை பதவி கொடுத்து வைத்திருந்தார். அவர் விரும்பிய திட்டங்களாக இருந்தாலும் நாடாளுமன்றத்தில் அனைத்தையும் அவர் விவாதித்து முடிவு செய்தார். இதனால்தான் நாடாளுமன்ற ஜனநாயகம் என்ற வார்த்தை மதிப்பு மிக்கதாக இந்தியாவில் இன்றும் உள்ளது.

எளிமையாக சொன்னால், இந்தியாவில் இன்றுள்ள பல்வேறு பொதுத்துறை நிறுவனங்கள் விற்கப்படும் தனியாருக்கு குத்தகை விடப்படும் நிலையில் உள்ளன. அவற்றை எல்லாம் தொடங்கியது நேரு என்றால் புரிந்துகொள்ள எளிதானது அல்லவா?

இப்படி மக்களுக்கு உதவும் காரியத்திற்காக அவர் சுமக்கும் பழிகள் சாதாரணமானவை அல்ல. இந்தியாவின் பிரதமராக பதினேழு ஆண்டுகள் ஆட்சியில் இருந்தவர், நேரு. அவர் விமர்சனத்திற்கு அப்பாற்பட்டவர் கிடையாது. அவர் காலத்தில்தான் அரசு மருத்துவமனையான எய்ம்ஸ், உயர்கல்விக்கான ஐஐடிகள் உருவாக்கப்பட்டன.

நேரு மீது அவதூறு சேற்றைத் தூக்கி எறிய அவரது கட்சியைச் சேர்ந்த வல்லபாய் படேல் , சுபாஷ் சந்திரபோஸ் ஆகியோரை பலரும் பயன்படுத்திக்கொள்கிறார்கள். ஆனால் இவர்களோடு நேரு மாறுபாடான கருத்துகளை கொண்டிருந்தாலும் நட்போடுதான் பழகினார்.

இதற்கான முக்கியக் காரணம், ஐரோப்பாவில் படித்தாலும் நேரு காந்தியின் கொள்கைகளை பின்பற்றினார். காந்தியின் கனவுகளுக்கும் நேருவுக்கும் கருத்துகளில் கனவுகளிலும் வேறுபாடுகள் இருந்தன. ஆனால் இருவரும் தாய்நாட்டை நேசித்தனர். இருவரையும் ஒன்று சேர்ந்தது இந்தியா என்று நாடுதான். இன்று பிற கட்சியைச் சேர்ந்தவர் என்ற ஒரே காரணத்திற்காக ஒன்றிய அரசு, சுதந்திரத்திற்கு உழைத்த நேருவை இருட்டடிப்பு செய்கிறது. பொருளாதா வீழ்ச்சி, நடக்கும் நிகழ்வுகளுக்கு மறைந்த நேருவேதான் காரணம் என்று கூறுவது  என்ன மாதிரியான மனநிலை.

சாவர்க்கர் மதரீதியான கருத்துகளை கொண்டிருந்தாலும் கூட அவர் இறந்தபிறகு எழுதி வெளியிட்ட அஞ்சலிக் குறிப்பில் அவரை மறக்கமுடியாத இந்தியாவின் மகன் என்று இந்திராகாந்தி குறிப்பிட்டார். இந்தளவு தாராளமான மனதை ஆட்சியாளர்கள் பெற்றிருக்கவேண்டியது அவசியம். மதப்பிரிவினைகளை செய்த கலவரங்களை மூட்டியவர்களை தேசியக்கொடியில் இடம்பெறச்செய்யலாம், பணத்தில் கூட பொறிக்கலாம். ஆனால் வரலாறு என்றைக்கும் நாட்டிற்காக சுயநலன் பாராமல் உழைத்தவர்களை மறக்காது

குறிப்பிட்ட மதவாத சுயநல கும்பல்கள் நாட்டிற்கு உழைத்தவர்களை இருட்டடிப்பு செய்ய செய்ய அவர்களைப் பற்றிய நினைவுகளை உருவாக்கிக்கொண்டேதான் இருக்கிறார்கள். இதை அவர்கள் என்றுமே மறக்க முடியாது.

**சாகரிகா கோஸ்  எழுதிய கட்டுரையைத் தழுவியது.**
**டைம்ஸ் ஆப் இந்தியா**

13

# இந்தியாவின் எல்லைகளைப் பிரித்த ராட்கிளிப்!




1947ஆம் ஆண்டு ஆகஸ்ட் பதினைந்தாம் தேதி. நள்ளிரவு. இந்தியாவுக்கு சுதந்திரம் கிடைத்துவிட்டது. விதியுடனான சந்திப்பும் கூட நடந்தது. ஆனால் அதில் முக்கியமான பிரச்னை ஒன்று இருந்தது. இந்தியா எங்கே முடிகிறது, பாகிஸ்தான் எங்கே தொடங்குகிறது என்ற எல்லைப் பிரச்னைதான்.




அப்போதைய ஆட்சியாளரான மவுண்ட் பேட்டனுக்கு இருந்த பிரச்னை பிரிக்கப்பட்ட இரண்டு நாடுகளும் எல்லைக்காக மீண்டும் குற்றம்சாட்டி சண்டை போடக்கூடாது என்பதுதான். அவர் இதற்காக எல்லைகளை பிரிப்பதற்கான யோசனையை உருவாக்கினார். இந்திய அரசுக்கு, அமைதியான முறையில் அதிகாரத்தை விட்டுக்கொடுப்பதற்கான காலத்தை பிரிட்டிஷ் அரசு ஏற்கெனவே இழந்துவிட்டது.

1942ஆம் ஆண்டு அமைக்கப்பட்ட கிரிப்ஸ் கமிஷனும் தோல்வியுற்றது. 1946ஆம் ஆண்டு மூன்று உறுப்பினர்களைக் கொண்டு அமைக்கப்பட்ட கமிட்டியும் இரு நாடுகளை பிரிப்பது அவசியம் என்று கூறிவிட்டது. இதில் முக்கியமாக எழுந்த பிரச்னை, துணைக்கண்டத்தை எப்படி பிரிப்பது என்பதே. எல்லைகளை பிரிக்க அழைக்கப்பட்டவர் ஒரு வழக்குரைஞர். இவர் பெயர் சிரில் ராட் கிளிப். 48

வயதானவர் அதிக நாடுகள் பயணித்தது கிடையாது. இந்தியா, பாகிஸ்தான் ஆகிய நாடுகளின் எல்லைகளை ஐந்தே வாரத்தில் பிரித்து சாதனை படைத்து சர்ச்சையானார்.

வழக்குரைஞராக திறம்பட வேலை செய்தவர், போர்காலத்தில் பிரிட்டிஷ் அரசின் தகவல் தொடர்புத்துறையில் தணிக்கைத்துறையின் தலைவராக இருந்தார். இவர், ஹெய்லிபெரி எனும் பள்ளி, ஆக்ஸ்போர்டு கல்லூரியில் படித்தவர். நேருவின் தங்கை விஜயலட்சுமி பண்டிட் அமெரிக்காவுக்கு சென்றதைக் கூட எதிர்த்து பிரசாரம் மேற்கொண்டார். ஜெர்மன் நாட்டில் நடைபெற்ற சம்பவங்களைப் பற்றிக் கூட தவறான தகவல்களை பிரசாரம் செய்தார் ராட்கிளிப் என பேட்ரிக் பிரெஞ்ச் என்பவர் எழுதினார்.

ஜூலை 8 அன்று நியூ டெல்லிக்கு வந்தார் ராட்கிளிப். பஞ்சாப் ராணுவம் அவருக்கு பாதுகாப்பை வழங்கியது. யாரும் அவரை செல்வாக்கு செலுத்தி முடிவுகளை மாற்ற முடியாது என நாமும் எழுத ஆசைதான். ஆனால் ஆங்கில ராணுவத் தலைவர் ஆச்சின்லெக், மவுண்ட் பேட்டன், பஞ்சாப் ஆளுநர் ஈவன் ஜென்கின்ஸ் மற்றும் பிற ஆங்கில சமூகத்தினருடன் இணைந்துதான் சாப்பிட்டார். விருந்துகளில் பங்குகொண்டார்.

ராட்கிளிப் தனது வேலை பற்றி அங்கு வேலை செய்த ஆங்கில நண்பர்களிடம் கேட்டிருந்தால் கூட நல்ல ஐடியாக்கள் கிடைத்திருக்கும். அவர் அப்படி உதவி அல்லது ஆலோசனைகள் கேட்டாரா என்று தெரியவில்லை. அவரிடம் வேவ்வெல் என்பவர் தயாரித்த வரைபடம், காலாவதியான மக்கள்தொகை தகவல்கள் மட்டுமே இருந்தன. மக்கள், ஆறுகள், கிராமங்கள், கால்வாய்கள், சாலைகள் என அனைத்தையும் அவர் 36 நாட்களில் பிரித்தாக வேண்டும். இதற்கு மேலாக இந்தியாவின் வெப்பநிலை அவரை பாதித்துக்கொண்டிருந்தது.

பாகிஸ்தானிடம் பெரோஸ்பூரின் பகுதிகளை கொடுக்க நினைத்திருந்தார் ராட்கிளிப். ஆகஸ்ட் முதல் வாரம், சிம்லாவில் தனது நண்பர்களோடு உட்கார்ந்து சாப்பிடும்போது இதை சொன்னார். கூடுதலாக இந்தியாவுக்கு குர்தாஸ்பூர் கிடைக்கிறது என்பதால் அதற்கு சரியான பதிலீடு இது என நினைத்தார். ஆனால் இந்த வார்த்தை வெளியே பரவியபோது என்ன எதிர்வினை கிடைத்ததோ தனது எண்ணத்தை பின்னர் மாற்றிக்கொண்டார் ராட்கிளிப்.

ஆகஸ்ட் 13 அன்று, தனது வேலைகளை முடித்து மவுண்ட்பேட்டனிடம் கொடுத்துவிட்டார் ராட்கிளிப். அவரோ, ஆகஸ்ட் 15ஆம் தேதிவரை அமைதி காத்தார். அடுத்தநாள் தான் எல்லைகளைப் பற்றி செய்தியை வெளியிட்டார். ஆகஸ்ட் 16ஆம் தேதி நேரு, வல்லபாய் படேல், லியாகத் அலிகான், பல்தேவ் சிங் ஆகியோர் அரசின் கௌன்சில் சேம்பருக்கு அழைக்கப்பட்டனர். மாலை 5 மணிக்கு அவர்களுக்கு எல்லைகள் பற்றி செய்திகள் கூறப்பட்டன. அவர்களின் முகங்களில் எள்ளளவும் மகிழ்ச்சி இல்லை. பூசல்கள் மறைந்து அமைதி நிலவ சில மாதங்கள் தேவைப்பட்டன.

ஆகஸ்ட் 17ஆம் தேதி ராட்கிளிப் தடாலடியாக ஊருக்கு கிளம்பிவிட்டார். அதற்குப் பிறகு அவர் இந்தியாவின் பக்கமே எட்டிப்பார்க்கவில்லை. இந்தியா கேட்டுக்கொண்டால் நீங்கள் இந்தியாவுக்கு வருவீர்களா என்று ஒருமுறை அவரைக் கேட்டபோது , நிச்சயம் மாட்டேன். நான் அப்படி வந்தால் இரு நாட்டுக்காரர்களும் என்னை சுட்டுக்கொன்றுவிடுவார்கள் என்று சொன்னார். அவர் எல்லையைப் பிரிக்கும்போதே இந்த உண்மை தெரிந்திருக்கிறது. ஓடியதால் பிழைத்துக்கொண்டார். அடிப்படையில் பிரிட்டிஷ் அரசுக்கு இந்தியா அமைதியாக இருப்பதில் விருப்பம் இல்லை. எனவே, முடிந்தளவு நாட்டை துண்டாடிவிட்டு கலவரங்கள் நிகழும் சூழலில்தான் நாட்டை விட்டுவிட்டு சென்றனர்.

**டைம்ஸ் ஆஃப் இந்தியா**

14

# நேரு செய்த பெரும் தவறு இதுதான்! - அரவிந்த் பனகரியா, பொருளாதார பேராசிரியர், கொலம்பியா



இந்தியா தனது 75ஆவது ஆண்டில் காலடி எடுத்து வைத்துள்ளது. ஆனால் தனது நூறாவது ஆண்டைத் தொடும்போது வல்லரசாக வளர்ச்சி பெற்ற நாடாக மாறியிருக்குமா என்பதே சந்தேகமாக இருக்கிறது. சுதந்திரம் பெற்று ஒரு நாடு 75 ஆண்டுகள் கடந்து வந்திருக்கிறது என்பது பெரிய விஷயம். பிற நாடுகள் இதே காலகட்டத்தில் இந்தியாவை விட மிகப்பெரிய வளர்ச்சியை பெற்றுள்ளனர். ஆனால் அதில் பின்தங்கிவிட்டோம்.

பொருளாதார ரீதியாக இந்தியா பெரும்தோல்வியை தழுவியுள்ளது. இதற்கு முக்கியமான காரணம், சுதந்திரம் பெற்றபிறகு ஆட்சிக்கு வந்த பிரதமரான நேருவும் அவர் கடைபிடித்த சோசலிச கொள்கையும்தான். பலருக்கும் கேளவிகள் மனதில் தோன்றலாம். அவர் கடைபிடித்த கொள்கையில் என்ன பிரச்னை என்று? அவர் பொதுத்துறை நிறுவனங்களை உருவாக்கினார். கனரக பெரும் தொழிற்சாலைகளை கட்டினார். இவற்றில் கிடைக்கும் லாபம் அரசுக்கு வரும். இது தனியாரின் சொத்துக்களைப் போல அரசு சொத்தாக மாறும் என நினைத்தார். இந்த தொழிற்சாலைகளுக்கான முதலீடு அதிகம்.

நேருவின் சோசலிசம், மார்க்சிசத்தின் புரட்சிகர கூறுகளை தவிர்த்து பேபியன் சோசலிசத்தை தழுவியது அவர் 1936 வரையிலான காலகட்டத்தில் சோசலிசத்தைக் கடைப்பிடித்தார். வல்லரசு நாடுகள் கச்சாப் பொருட்களுக்காக காலனி நாடுகளை பயன்படுத்துவதை கவனித்தார். அந்த வகையில் அதே முதலாளித்துவ மாதிரியை அப்படியே இறக்குமதி செய்துதான் கனரக தொழிற்சாலைகளை இந்தியாவில் உருவாக்கினார். நாம் முதலாளித்துவத்திற்கு பலியானவர்களாக இருக்கவேண்டுமா அல்லது அதற்கு இணையான துடிப்பு கொண்டவர்களாக உருவாக வேண்டாமா என டிஸ்கவரி ஆப் இந்தியா நூலில்

எழுதியுள்ளார்

தொழில்மயமாக்கம், தன்னிறைவு என்பதை சரியான அர்த்தத்தில் நேரு புரிந்துகொள்ளவில்லை. இதனால் பெரும் தொழிற்சாலைகளை அமைத்து எந்திர பாகங்ளை தயாரித்து, அதனை பொருத்தி பெரும் எந்திரங்களை தயார் செய்வதாக தொழில்துறை செயல்பட்டது. இதில் எந்திரங்கள் மக்களுக்கு தேவையான என்ற கேள்வியே எழவில்லை. மேற்கு நாடுகளில் பெறப்பட்ட தொழில்மயமாக்கல் மாதிரியை சரியாக புரிந்துகொள்ளாமல் இந்தியாவில் செயல்படுத்தினார். இதுபற்றி 1956இல் பேசும்போது, நாம் மக்களுக்கான தினசரி பயன்படுத்தும் பொருட்களை உருவாக்க நினைத்தோம், ஆனால் இப்போது அனைத்திற்கும் அடிப்படையான தாய் தொழிற்சாலைகளை தொடங்கியுள்ளோம். இதில் இரும்பு, ஸ்டீல் ஆகியவை உற்பத்தியாகும். இதனைப் பயன்படுத்தி எந்திரங்களை உருவாக்கலாம் என நம்பிக்கையோடு பேசியுள்ளார். 1953ஆம் ஆண்டு பேச்சின்போது, நாம் பெரும் தொழிற்சாலைகளை தொடங்கினால்தான் நவீன விஷயங்களில் நம்மை பொருத்திக்கொள்ள முடியும், ரயில்கள், துப்பாக்கி, விமானங்கள் ஆகியவற்றை நாமே உருவாக்கியுள்ளோம். இவற்றை வெளிநாடுகளில் வாங்கினால் நாம் அவர்களுக்கு அடிமையாகிவிட்டோம் என்றே பொருள் என்று பேசினார்.

நேரு தனது பிரதமர் பதவிக்காலத்தில் மேற்சொன்னதை நிறைய இடங்களில் பேசியுள்ளார். இவரது நடவடிக்கை காரணமாக பெரும் தொழிற்சாலைகளுக்கு அரசு நிறைய தொகையை முதலீடு செய்தது. இதில் திறமை இல்லாத சிலருக்கு வேலைகள் கிடைத்தாலும் சிறு, குறு தொழிற்சாலைகள் முதலீடு கிடைக்காமல் தள்ளாடத் தொடங்கின. அவற்றின் வருமானம் நாட்டுக்கு பெரும் உதவி செய்தாலும் அரசின் உதவி கிடைக்காத காரணத்தால் பெரியளவு வளர்ச்சியைப் பெறமுடியவில்லை. அரசு இந்த நேரத்தில் வெளிநாட்டிலுள்ள பொருட்களை உள்நாட்டில் பெறவும் உரிமம் தேவை என கட்டுப்பாடுகளை விதித்து வளர்ச்சிக்கு எதிராக மாறியது.

விவசாயத் துறையில் இருந்த மக்களின் எண்ணிக்கை 1951 ஆம் ஆண்டிலிருந்து 1971ஆம் ஆண்டு வரை பெரிய மாற்றம் இல்லாமல் 69.7 சதவீதமாகவே இருந்தது. இதற்கு என்ன அர்த்தம், அவர்கள் வறுமையில் இருந்து மீளமே இல்லை என்பதுதானே? -

டைம்ஸ் ஆஃப் இந்தியா

15

# இந்திய மண்ணில் ஜனநாயக சிந்தனைகளை ஊன்றியவர்! - நேருவின் போராட்டகால சிந்தனைகள்



***நேருவின் போராட்டகால சிந்தனைகள்***
***தொகுப்பாசிரியர் அர்ஜூன் தேவ்***
***நேஷனல் புக் டிரஸ்ட்***

இந்த நூல் சுதந்திரத்திற்கு முந்தைய காலகட்டத்தைப் பற்றி பேசுகிறது. அந்த காலகட்டத்தில் உலகளவில் நடைபெற்ற பல்வேறு சம்பவங்கள் பற்றி நேரு தன் மனதில் தோன்றிய கருத்துகளை எழுதினார். பேசினார். அதன் ஒரு பகுதிதான் தொகுப்பாளர் அர்ஜூன் தேவால் தொகுக்கப்பட்டுள்ளது.

உலகளவில் நடைபெறும் போர், அரசியல் தந்திரங்கள், வல்லரசு தகராறுகள், பொருளாதார வளர்ச்சி என பல்வேறு விஷயங்களில் நேருவின் சிந்தனை ஆச்சரியம் தருகிறது. ஏறத்தாழ இந்தியாவின் முதல் பிரதமராக ஆன உடனே இவரது சிந்தனைகள் அரசியல் கொள்கைகளாக வடிவம் பெற்றன. அதுவும் கூட நாட்டின் நலனை முன்வைத்துத்தான் . பொதுத்துறை நிறுவனங்கள் இன்று விற்கப்பட்டு வரும் நிலையில் அவர் அந்த நிறுவனங்களை தொடங்கியது மக்களை ஏழ்மையில் வீழ்த்த பிரதமர் மோடிக்கு பொருளாதார ஆலோசனை கூறிய அடிபொடிகள் கூக்குரலிடுகின்றனர்.
அன்று அரசு முழுப்பொறுப்பில் தனது நிதி முதலீட்டைக் கொண்டு அரசு நிறுவனங்களைத் தொடங்கியிருக்காவிட்டால் மக்களுக்கு பெரும்பாலான சேவைகள் சென்றே சேர்ந்திருக்கிறது. இன்று பொதுதுறை நிறுவனங்களிடமிருந்து அரசு ஏராளமாக டிவிடெண்டுகளை வாங்குகிறது. நேரு தொடங்கிய நிறுவனம் என நினைத்தால் ரோஷத்தோடு அதை வாங்காமல் தவிர்த்து ஆட்சி நடத்தலாமே?

மக்களுக்கான நீதி என்ற வகையில் நேரு தனது கருத்துகளை மனிதநேயமிக்கவராகவே தெரிவித்திருக்கிறார். ஐரோப்பாவில் படித்து வளர்ந்தாலும் கூட இந்தியாவை காந்தியின் வழிகாட்டுதலில் புரிந்துகொண்டவர் நேரு. இருவருக்குமான கனவுகள் வேறு என்றாலும் இருவரும் ஒன்றுபட்டது, ஒரே விஷயத்தில்தான் அதுதான் ஜனநாயக இந்தியா.

மதம், பண்பாடு பற்றி நேரு எழுதியவை, பேசியவை தனியாகவே இருக்கின்றன.

இவை கட்டுரைகளாக இருந்தாலும் கூட இன்றளவும் அவரது சொற்கள் காலத்தை தாண்டி படிக்க கூடியதாகவே உள்ளன. அனைத்து மதங்களிலும் உள்ள மதவெறியர்களைப் பற்றி வெளிப்படையாகவே அவர் கூறியுள்ளார். சங் பரிவார் போன்ற அமைப்புகள் மக்களை பிரிவினைக்கு உள்ளாக்குவது பற்றி பேசும் அவர், முஸ்லீம் அடிப்படைவாத அமைப்புகள் பிரிவினைக்கு வித்திடுவது பற்றியும் கண்டித்திருக்கிறார்.

நேருவின் போராட்ட கால சிந்தனைகள் என்ற நூல், சுதந்திரத்திற்கு முந்தைய காலகட்டத்தில் நேருவின் சிந்தனை எப்படியிருந்தது, அவர் எதைப்பற்றி கவலைப்பட்டார், என்னென்ன விஷயங்களை கவனித்தார் என்பதை விளக்கமாக வாசிப்பவர்களுக்கு புரிய வைக்கிறது.

16

# இந்தியாவின் யுரேகா தருணங்கள்!

சிறந்த அண்டைநாடு

இதற்கு இந்தியாவைத்தான் அடையாளமாக சொல்லவேண்டும். அண்மையில் ஆப்கானிஸ்தானில் ஜனநாயக அரசை உருவாக்க பல்வேறு பிரயத்தனங்கள் செய்து முதலீடு செய்து கோட்டை விட்டாலும் அங்குள்ள மக்களின் வாழ்வாதார நம்பிக்கையாக இந்தியா இருக்கிறது. இருக்கும். 1971ஆம் ஆண்டு வங்கதேசம் விடுதலை பெறுவதற்கு இந்தியா உதவி செய்தது. அன்றைய பிரதமர் இந்திரா காந்தி இந்த விஷயத்தில் தீவிரம் காட்டி வெற்றி பெற்றார். அகதிகள் அமெரிக்காவிற்கும், சீனாவிற்கும் செல்வதற்கும் உதவினார். பாகிஸ்தானின் ராணுவ அத்துமீறல்கள் குறித்த உலக நாடுகளின் கருத்துகளையும் கவனப்படுத்தினார். சோவியத்துடன் ஒப்பந்தங்களை செய்தார். மதம் சார்ந்த நாடு என்பதை இந்தியா, தனது செயல்பாடுகளால் மாற்றியது என மேற்சொன்ன சம்பவங்களை வைத்து உறுதி செய்யலாம்.

**இறுதியாக ஜெயம்!**

1961ஆம் ஆண்டு கோவாவை போர்ச்சுகீசியர்களிடமிருந்து இந்திய அரசு மீட்டது. இதற்கு ஆபரேஷன் விஜய் என்று பெயரிட்டனர். இப்போராட்டத்தில் ஏழு ராணுவ வீர ர்கள் பலியானார்கள். இந்த வெற்றியின் மூலம் 450 கால ஐரோப்பியர்களின் காலனி ஆட்சி முழுமையாக முடிவுக்கு வந்தது. 36 மணிநேரங்கள் நிலம், நீர், ஆகாயம் என போர் நடைபெற்றது.

**செயற்கைக்கோள் வழியாக போர்!**

போர் என்றதும் பயந்து விடாதீர்கள். இதன் களம் விண்வெளி. இஸ்ரோ, தனது பிஎஸ்எல்வி ராக்கெட் மூலம் ஏராளமான சாதனைகளை செய்துள்ளது. இந்த வகையில் சீனா இதற்கு பின்னாடிதான் உள்ளது. 2017ஆம் ஆண்டு ஒரே ராக்கெட்டில் 104 செயற்கைக்கோள்களை விண்ணுக்கு அனுப்பிய சாதனை இந்தியாவிடம்தான் உள்ளது.

**விண்வெளிக்கனவு**

1960ஆம் ஆண்டு சுதந்திரமடைந்த இந்தியாவில் எங்கு பார்த்தாலும் சிக்கல்கள்தான் நிரம்பியிருந்தன. காலனி கால ஆட்சி மண்ணை மட்டுமல்ல மக்களையும் சுரண்டியிருந்தது. இதனால் பொருளாதாரம் வீழ்ந்துகிடந்தது. கல்வியறிவு இல்லை. குழந்தைகளின் இறப்பும் அதிகரித்து வந்தது. ஆனால் அப்போது இந்தியர்களின் கனவு விண்வெளியில் இருந்தது. இந்திய ரசு விண்வெளி ஆராய்ச்சிகளை செய்ய இஸ்ரோ அமைப்பை நிறுவியது. விக்ரம் சாராபாய்தான் அதன் தலைவராக விண்வெளித்திட்டங்களை உருவாக்கினார். செயல்படுத்தினார்.

### விண்வெளியில் இந்தியா!

சந்திரயான் 2 விண்வெளியில் ஏவப்பட்டு நிலா, சூரியன் பற்றிய தகவல்களை கொடுத்து வருகிறது. 2012-14 காலகட்டத்தில் செவ்வாய்க்கு செல்வதற்கான குறைந்த செலவிலான விண்கலம் உருவானது. முதல் முயற்சியிலேயே இது வெற்றியும் பெற்றது. அடுத்து 2023ஆம் ஆண்டு விண்வெளி வீர ர்களை விண்வெளிக்கு கொண்டு செல்லும் செயல்பாடாக ககன்யான் விண்கலம் தயாரிக்கப்பட்டு வருகிறது. இதற்கு முன்னர் ரஷ்யாவின் விண்கலத்தில் இந்திய வீர ர் ராகேஷ் சர்மா, விண்வெளிக்கு சென்று வந்திருக்கிறார். அவரிடம் முன்னாள் பிரதமர் இந்திரா காந்தி, விண்வெளியிலிருந்து பார்க்க இந்தியா எப்படி தெரிந்தது என்று கேட்டார். அதற்கு அவர், சாரே ஜகான்சே அச்சா என்று பதிலளித்தார்.

### அணுக்கடிகாரம்

விண்வெளியில் உள்ள பொருட்களைப் பற்றிய தகவல்களை சரிபார்க்க அளக்க தொலைவைக் கணிக்க அணுக்கடிகாரம் தேவை. இஸ்ரோ, முதலில் அணுக்கடிகாரங்களை ஐரோப்பாவிலிருந்து வாங்கிக்கொண்டிருந்தது. 2018இல்  தானாகவே அணுக்கடிகாரத்தை தயாரித்து பயன்படுத்தி வருகிறது.

### அணு உலைகள்

இந்தியாவில் ஏழு அணு உலைகளில் 22 நியூக்ளியர் ரியாக்டர்கள் பயன்பாட்டில் உள்ளது. மொத்த மின்சாரப்பயன்பாட்டில் இதன் அளவு 3 சதவீதம் ஆகும். அடுத்து ஒரு அணு உலையை மகாராஷ்டிராவில் உள்ள ஜெய்தாபூரில் அமைக்க உள்ளனர். அப்படி அமைந்தால் இந்தியா உலகிலேயே அதிக அணுஉலைகள் கொண்ட நாடாக மாறிவிடும்.

### சூப்பர் கம்ப்யூட்டர் இந்தியா

பரம், மிஹிர், பிரத்யுஷ் ஆகிய மூன்றுமே இந்தியா தயாரித்துள்ள சூப்பர் கம்ப்யூட்டர்கள். இவை உலகின் ஐநூறு சக்தி வாய்ந்த கணினிகளின் பட்டியலில் இடம்பிடித்துள்ளன. பரம் என்ற கணினி மூன்றிலுமே ஆற்றல் வாய்ந்தது. இக்கணினி பட்டியலில் 63வது இடம் பிடித்துள்ளது. மற்ற இரண்டும் டாப் 100 பட்டியலுக்குள் வந்துவிட்டன. மிஹிர் , பேரிடர் மேலாண்மை சார்ந்த பணிகளுக்கும் கல்வி ஆராய்ச்சிக்கும் பயன்படுகிறது. பிரத்யுஷ் கணினி, தட்பவெப்பநிலை சார்ந்த ஆய்வுகளை செய்துவருகிறது.

### அன்டார்டிகா ஆய்வு

அன்டார்டிகாவில் இந்தியா, பார்தி, மைத்ரி என்ற இரு ஆராய்ச்சி மையங்களை நிறுவி செயல்பட்டு வருகிறது.  மைத்ரி, 1988ஆம் ஆண்டு நிறுவப்பட்டது. பார்தி 2012இல் நிறுவப்பட்டது. பரிணாம வளர்ச்சி, தட்பவெப்பநிலை மாற்றங்கள் என பல்வேறு ஆராய்ச்சிகளை இங்குதான் இந்திய ஆய்வாளர்கள் செய்து வருகின்றனர்.

### கடல் சாதனை

இந்தியா, ஐ.நாவின் பாதுகாப்பு கௌன்சிலில் ஐந்து நிரந்தர உறுப்பினர் நாடுகளில் இடம்பெறவில்லை. 2016 இல் ஐஎன்எஸ் அரிஹந்த் என்ற நீர்மூழ்கிக் கப்பலை உருவாக்கியது. இதிலிருந்து கண்டம் விட்டு கண்டம் ஏவும் ஏவுகணைகளை பொருத்தி ஏவ முடியும். இப்போது அரிஹட் என்ற நீர்மூழ்கி கப்பலை

உருவாக்கி சோதனை செய்து வருகின்றனர்.இதுபோல ஆறு கப்பல்களை உருவாக்கி வருகின்றனர். இவற்றில் இடம்பெற்ற 95 சதவீத பாகங்கள் உள்நாட்டு சரக்குதான்.

**ஏவுகணை சொல்லும் சேதி**

இந்தியாவில் பிருத்வி, அக்னி ஏவுகணைகள் உண்டு. ஆனாலும் கூட பிரம்மோஸ் ஏவுகணையைத்தான் அனைவரும் கவனித்தனர். சூப்பர்சோனிக் ஏவுகணையான இதனை, ஆகாயம், நிலம், நீர் என எதிலிருந்தும் பிற நாடுகளின் மீது ஏவ முடியும். இந்தியாவின் பிரம்ம புத்திரா, ரஷ்யாவிலுள்ள மாஸ்க்வா எனும் இரு ஆறுகளை நினைவுகூரும் வகையில் ஏவுகணையின் பெயர் அமைந்துள்ளது. அதிவேகமாக பாயும் இந்த வகை ஏவுகணை 2024இல் தயாரிக்கப்பட உள்ளது.

**இந்துஸ்தான் டைம்ஸ் - ரேச்சல்**

**17**

# கலைத்துறையில் சாதித்த இந்தியா!




**கலைகளில் சாதனை**

சாகித்திய அகாதெமி, இந்தியாவில் நூல்களை பல்வேறு மொழிகளில் வெளியிட்டு வரும் நிறுவனம். இந்த நிறுவனம் அதிகாரப்பூர்வமாக 1953ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. நாட்டில் உள்ள பல்வேறு மாநிலங்களின் கலாசாரங்களை சாகித்திய அகாதெமி ஒன்றிணைக்கிறது. இதுவரை ஆறாயிரத்திற்கும் மேற்பட்ட நூல்களை பதிப்பித்திருக்கிறது. ஆண்டுதோறும் பல்வேறு மாநிலங்களைச் சேர்ந்த எழுத்தாளர்கள், கவிஞர்கள், இளைய எழுத்தாளர்கள், மொழிபெயர்ப்பாளர்களை கௌரவித்து வருகிறது. போடோ, டோக்ரி, கொங்கணி போன்ற மொழிகளிலுள்ள இலக்கியப் பொக்கிஷங்களையும் அனைவரும் அறியும்படியாக மொழிபெயர்க்கும் பணியை சாகித்திய அகாதெமி செய்கிறது.

**தூர்தர்ஷன் அறிமுகம்**

இன்று அனைவரும் ஓடிடியில் வெளியாகும் படங்களை பார்க்கவும், இணையத்தில் உள்ள வெப் சீரிஸ்களையும் பார்த்து வருகிறோம். ஆனால் இந்தியாவில் தொடக்கத்தில் தூர்தர்ஷன்தான் அனைவருக்கும் ஒரே டிவியாக இருந்தது. 1959ஆம்ஆண்டு தூர்தர்ஷன் தொடங்கப்பட்டது. பல்வேறு தொலைக்காட்சிகளை தொடங்கி மூடினாலும் கூட தூர்தர்ஷனிடன் 21 சேனல்கள் உள்ளன. இவை அனைத்தும் இலவசமாக வழங்கப்படுகிறது. கிராமங்களில் தூர்தர்ஷன் மட்டுமே ஒரே டிவியாக முதலில் இருந்தது. இதில் வரும் செய்திகள், சினிமா பாடல்கள், படங்கள், விருது பெற்று படங்களின் ஒளிபரப்பு என கண்விழித்து பார்த்தவர்கள் அநேகம் பேர். தனியார் தொலைக்காட்சிகள் வந்தபிறகு வலுவான கட்டமைப்பு இருந்தாலும் கூட மோசமான நிகழ்ச்சிகளால் தூர்தர்ஷன் தனது பார்வையாளர்களை இழந்துவிட்டது.

**இசைப்புயலே**

இந்தியாவிலும் கிராமி விருது பெற்றவர்கள் இருந்தனர். தபேலா கலைஞர்களான ஜாகிர் உசேன், டிஹெச் விநாயக்ராம், கிடார் கலைஞர் விஷ்வ மோகன் பட் ஆகியோர் இந்த விருதைப் பெற்றார்கள். 2014ஆம் ஆண்டு ரிக்கி கேஜ், விண்ட்ஸ் ஆப் சம்ஸ்காரா ஆல்பத்திற்காக விருது பெற்றார். ஏ.ஆர். ரஹ்மான் ஸ்லம்டாக் மில்லியனர் படத்திற்காக, இரண்டு கிராமி விருதுகளை வென்றார். ரவி சங்கர், நான்கு கிராமி விருதுகளோடு வாழ்நாள் சாதனைக்காக விருதையும் பெற்றார். காந்தி(1982) படத்திற்கான உடை வடிவமைப்பிற்காக பானு அத்தையா முதல் ஆஸ்கர் விருதைப் பெற்றார். சத்யஜித்ரேவின் திரைப்படங்களுக்காக 1992ஆம் ஆண்டு கௌரவ ஆஸ்கர் விருது வழங்கப்பட்டது.

**பொருளாதார சாதனை**

அமர்த்தியா சென்னுக்கு 1998ஆம்ஆண்டு பொருளாதாரத்திற்காக நோபல் பரிசு வழங்கப்பட்டது. அண்மையில் மேற்கு வங்கத்தை பூர்விகமாக கொண்ட அபிஜித் பானர்ஜிக்கு, அவரது பொருளாதார ஆய்வுகளுக்கு நோபல் பரிசு வழங்கப்பட்டது. இவர்கள் தவிர சிவி ராமன், சுப்பிரமணிய சந்திரசேகர், ஹர் கோபிந்த் குரானா ஆகியோருக்கு நோபல் பரிசு வழங்கப்பட்டுள்ளது. 1979ஆம் ஆண்டு அன்னை தெரசா செய்த சமூகப்பணிகளுக்காக அவருக்கு நோபல் அமைதிப் பரிசு வழங்கப்பட்டது. அமைதிக்கான பரிசை குழந்தைகள் செயல்பாட்டாளர் கைலாஷ் சத்யார்த்தி, பாகிஸ்தானைச் சேர்ந்த செயல்பாட்டாளர் மலாலா

யூசுப் ஆகிய இருவருக்கு 2014ஆம் ஆண்டு பகிர்ந்துகொண்டனர்.

**கலைஞர்கள் ஜங்ஷன்**

கொச்சியில் நடைபெறும் ஓவியக்கலைஞர்களின் பியன்னாலே விழா அனைவரும் அறிந்ததுதான். 2012ஆம் ஆண்டு முதல் இந்த விழா கொச்சியில் தொடர்ச்சியாக நடைபெறுகிறது. இதற்காகவே ஏராளமான வெளிநாட்டு கலைஞர்கள் இங்கு வந்து கலந்துகொண்டு சிறப்பிக்கின்றனர். இதில் நளினி மலானி, அதுல் தோடியா, கேம்ப் எனும் கலைக்குழு கலந்துகொண்டு பார்வையாளர்களை படைப்புகளால் மகிழ்விக்கின்றனர்.

**இந்திய எழுத்துகள்**

1971ஆம் ஆண்டு விஎஸ் நைபால், எ ஃப்ரீ ஸ்டேட் என்ற நூலுக்காக புக்கர் பரிசைப் பெற்றார். சல்மான் ருஷ்டி எழுதிய மிட்நைட் சில்ரன் என்ற நூல் சுதந்திரம் பெற்ற பிறகு இந்தியாவில் நடைபெற்ற விஷயங்களை பேசுகிற முக்கியமான நாவல். 1981ஆம் ஆண்டு இந்த நூல் புக்கர் பரிசைப் பெற்றது. 1997ஆம் ஆண்டு அருந்ததிராயின் காட் ஆப் ஸ்மால் திங்க்ஸ் என்ற நூலுக்கு புக்கர் பரிசும், 2006ஆம் ஆண்டு தி இன்ஹெரிடன்ஸ் ஆஃப் லாஸ் என்ற நூலுக்கும், 2008ஆம் ஆண்டு அரவிந்த் அடிகாவிற்கு தி வொயிட் டைகர் என்ற நூலுக்கும் விருது கிடைத்தது.

**கலை விற்பனை**

1987ஆம் ஆண்டு கிரிஸ்டி ஏல நிறுவனத்தில் மாடர்ன் இந்தியா கலைப்படைப்பு ரூ.16 லட்சத்திற்கு விலைபோனது.  இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு சோத்பை நிறுவனத்தில்  இந்திய படைப்பு 38 லட்சத்திற்கு விற்பனையானது. 2002ஆம் ஆண்டு டையிப் மேத்தாவின் செலிபரேஷன் படைப்பு, முதன்முறையாக ஒரு கோடி ரூபாய்க்கு விற்பனையானது. இந்த ஆண்டு சப்ரோன் ஆர்ட் என்ற நிறுவனத்தில் விஎஸ் கைடோண்டோவின் படைப்பு 39 கோடிக்கும், அம்ரிதா சேர் கில்லின் படைப்பு 37 கோடிக்கும் விற்றது.

**ஹெச்டி**

18

# இந்தியாவில் மக்களின் வாழ்க்கையில் ஏற்பட்ட மாற்றங்கள்!



**சிறந்த வாழ்க்கை**

**நகரங்களின் அதிகரிப்பு தந்த வாய்ப்பு**

இந்திய நகரங்கள் ஏராளமான மாற்றங்களைப் பெற்றன. கடந்த காலத்தில் இருந்த சாதி, குடும்ப பெருமை குறைந்தது வேலை வாய்ப்புகள் அதிகரித்தன. பிற மாநிலங்களிலிருந்தும் கூட தென்னிந்தியாவிற்கு ஏராளமான தொழிலாளர்கள் இடம்பெயர்ந்து வாழத் தொடங்கினர். மெட்ரோ நகரங்களில் மட்டுமல்லாது, பிற இரண்டாவது, மூன்றாவது கட்ட நகரங்களிலும் வளர்ச்சி கிடைக்கத் தொடங்கியுள்ளது. மக்களின் வருகையால் அரசும் பல்வேறு அடிப்படை வசதிகளில் கவனம் செலுத்த தொடங்கியுள்ளது.

**அனைவருக்குமே அன்பு**

பாலின ரீதியாக சிறுபான்மையினருக்கு மதிப்பு கிடைக்கத் தொடங்கியிருக்கிறது. 2001ஆம் ஆண்டு நாஷ் பவுண்டேஷன் இதற்கான வழக்கைத் தொடுத்தது. இதில் மாற்றுப்பாலினத்தவர்களை குற்றவாளிகளாக கருதும் காலனிய சட்டமான பிரிவு 377 ஐ நீக்க கோரினர். ஆமை வேகத்தில் நடந்த வழக்கு 2009இல் நடைபெற்றபோது உயர்நீதிமன்றம் இந்தபிரிவு வயது வந்தோருக்கு பொருந்தாது என கூறிவிட்டது. ஆனாலும் மீண்டும் சிலர் வழக்குப் போட இப்போது வழக்கு பத்தாண்டுகளுக்கு பிறகு உச்சநீதிமன்றத்தில் உள்ளது.

**மாற்றுப்பாலினத்தவருக்கு உரிமை**

சமத்துவம் அனைத்து பாலினத்தவருக்கும் உண்டு என உச்சநீதிமன்றம் 2014ஆம் ஆண்டு தீர்ப்பில் கூறியது. இதன்மூலம் மாற்றுப்பாலினத்தவரை பாதுகாக்கும் சட்டம் உருவாக்கப்பட்டது. இதன் மூலம் மாற்றுப்பாலினத்தவருக்கான உரிமைகள் சட்டம் மூலம் அங்கீக்கரிக்கப்பட்டுள்ளது.

**இணைந்த இந்திய ஒன்றியம்**

இந்தியாவில் இப்போது மாநிலங்களில் 45 சதவீத இணைய இணைப்பு உள்ளது. முதலில் இந்த சதவீதம் 7 சதவீதமாக (2007) இருந்தது. 2025இல் இந்த இணைய பயனாளர்களின் எண்ணிக்கை 900 மில்லியனாக அதிகரிக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. பிராட்பேண்ட் இணையத்தை விட போனில் பயன்படுத்தும் இணையமே இந்தியாவில் அதிகமாக உள்ளது. பெருந்தொற்று காலத்தில் மாணவர்கள் இணையம் பயன்படுத்தும் எண்ணிக்கை அதிகமாக உள்ளது. இந்தியாவிற்கு இப்போது போட்டி, அதன் அருகிலேயே உள்ள சீனா மட்டுமே.

2019ஆம் ஆண்டு ஒரு ஜிபி டேட்டா மிக குறைவான விலையில் கிடைப்பதாக கூறப்படுகிறது . இது அமெரிக்காவை விட 45 சதவீதம் குறைவான விலையாம். இப்போதைக்கு நாட்டில் சேவை அளிக்கும் நிறுவனங்கள் பலவும் தடுமாறிக்கொண்டுதான் தொலைபேசி சேவையை அளித்து வருகின்றன. ஜியோ, ஏர்டெல் மட்டுமே களத்தில் வலுவாக நிற்கின்றன. மற்ற நிறுவனங்களான வோடபோன், ஐடியா, பிஎஸ்என்எல், எம்டிஎன்எல் ஆகியவை நஷ்டத்தில் வீழ்ந்துவிட்டன.

**வெள்ளையர்களின் டெக்ஸ்மதி**

இந்தியர்களின் பாஸ்மதி அரசியை 1997ஆம் ஆண்டு அமெரிக்க நிறுவனம் தன்னுடையது என காப்பிரைட் பதிவு செய்துவிட்டது. எப்போதும் போலவே தாமதமாக விழித்த அரசு, தன்னுடைய நாட்டில் விளைந்த அனைத்து பொருட்களையும் பதிவு செய்வதில் கவனம் செலுத்தியது. வாரணாசி கண்ணாடி, டார்ஜிலிங் தேயிலை, நீலாம்பூர் தேக்கு என 370  பொருட்களை காப்பிரைட் பதிவு செய்துவிட்டது. இதன் காரணமாக பாஸ்மதி அரிசி இந்தியாவுக்கு சொந்தமாகிவிட்டது. இதனால் அமெரிக்கர்கள் தங்களது அரிசிக்கு சிம்பிளாக, டெக்ஸ்மதி, ஜாஸ்மதி, காஷ்மதி என பெயர் மாற்றி விற்பனை செய்து வருகின்றனர். சாதித்துவிட்டோம் அல்லவா?

**மெட்ரோ சலோ**

1984ஆம் ஆண்டு கொல்கத்தாவில் மெட்ரோ ரயில் ஓடத்தொடங்கியது. 2002ஆம் ஆண்டு டெல்லியில் மெட்ரோ தனது பயணத்தைத் தொடங்கியது. சுத்தமான ரயில், பாதுகாப்பு, விலை குறைவு என பல்வேறு அம்சங்களால் மெட்ரோ ரயில் அங்கு முக்கியமான இடத்தைப் பிடித்துவிட்டது. இங்கு ரயில்கள் ஓடவில்லையென்றால் ஒட்டுமொத்த மக்களின் வாழ்க்கையே தடுமாறிப் போய்விடும். மேலும் நாட்டிலுள்ள பத்து நகரங்களிலும் மெட்ரோ ரயில் பணிகள் வேகமெடுத்துள்ளன.

சாதாரண ரயில் சேவையும் சும்மா இல்லை. கொஞ்சம் கழிவறை நெடி அதிகம் அடித்தாலும்  1 பில்லியன் டன்கள் சரக்கையும், தினசரி 22 மில்லியன் மக்களை கொண்டு சென்று சாதித்துள்ளது. கன்னியாகுமரியிலிருந்து அசாமில் உள்ள தில்புருகார் வரை செல்லும் விவேக் எக்ஸ்பிரஸ் 82 மணி நேரங்கள் பயணிக்கிறது. இதன் வழித்தடத்தில் மொத்தம் 56 நிறுத்தங்கள் உள்ளன.

**கார் கனவு**

2009ஆம் ஆண்டு டாடா மோட்டார்ஸின் உரிமையாளர் ரத்தன் டாடா, ஒரு லட்ச ரூபாய்க்கு நானோ என்ற காரை உருவாக்கி விற்றார். பைக்குகளின் விலையே ஒரு லட்சம் வந்துவிட்ட நிலையில் ஒரு லட்சத்திற்கு ஷோரூம் விலை என்றால் அது எவ்வளவு குறைவு... ரத்தன் டாடவின் கனவு பலருக்கும் விருப்பமாக இருந்தது. இது காரா, ஆட்டோவா என பலரும் கிண்டல் செய்தாலும், இன்று விற்பனையில் நானோ இல்லாவிட்டாலும் டாடாவின் மகத்தான முயற்சி என்பதில் எந்த ஐயமில்லை.

**ஆயுளே கூடுதே**

இன்று நவீன மருத்துவம் கையில் உள்ளது. வாழ்க்கைத்தரம் உயர்ந்துள்ளது. ஆன்டிபயாடிக்குகள் ஏராளம் உள்ளன. உலகளவில் மனிதர்களின் ஆயுள் 72. 7 வயதாக உள்ளது. இந்தியாவில் மதக்கலரம், வெறுப்புவாதம், நோய்த்தொற்று ஆகியவற்றால் ஒருவர் பாதிக்கப்படாமல் இருந்தால் 69.7 ஆண்டுகள் உயிர் வாழ முடியும் என ஆய்வில் தெரிய வந்துள்ளது.

**வாங்க அகதிகளே வாங்க**

இந்தியாவில் நிர்பந்தம் உருவானால்தான் சட்டமே ஏற்படுத்தப்படும். இதேநிலைதான் அகதிகளின் பிரச்னைக்கும் கூட . மியான்மர், வங்கதேசம், திபெத், ஆப்கானிஸ்தான் என பல்வேறு நாடுகளிலிருந்து பிழைக்க வழியில்லாமல் உயிர் பிழைக்க வருபவர்களுக்கு வரவேற்பு கொடுப்பது இந்தியா மட்டுமே. இப்போது குடியுரிமை சட்டம், இந்தியர்கள், இந்திய மண் என்று தேசியவாதம் பேசினாலும் கூட அகதிகள் இந்தியாவில் ஏராளமானோர் உள்ளனர்.

**படம் காட்டுவோம்!**

1947ஆம் ஆண்டு இந்தியாவில் 150 திரைப்படங்கள் உருவாக்கப்பட்டன. 2017ஆம் ஆண்டு 1,986 திரைப்படங்கள் தயாரிக்கப்பட்டன. இதில் 364 படங்கள் இந்திப் படங்களாகும். தென்னிந்தியாவிலும் ஏராளமான படங்களை தயாரிக்கப்பட்டன. இப்படங்களே இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் திரையிடப்பட்டு பார்வையாளர்களை வசப்படுத்தின. படங்களில் அழகும், கதை சொல்லும் முறையும் மேம்பட்டுள்ளது. இதன் விளைவாக படங்களை உலக நாடுகளிலுள்ள பார்வையாளர்களை மனதில் வைத்து தயாரிப்பதும் தொடங்கியுள்ளது.

**ஹெச்டி - ரேச்சல்**

**19**

# இந்தியாவின் பெருமையான சாதனைகள்!

**இந்திய அரசியலமைப்பு**

இந்தியாவின் அரசியலமைப்பு நாட்டைக் கட்டமைத்ததில் முக்கியமான பங்கு வகிக்கிறது. ஜனநாயகம், சமத்துவம், நீதி, சுதந்திரம் ஆகியவற்றை இதில் உருவாக்கப்பட்டுள்ள சட்டங்கள் குடிமக்களுக்கு வழங்குகின்றன. அனைத்து மாநிலங்களுக்கான உரிமைகளை உள்ளடக்கிய ஒன்றிய அரசு என்பதை அரசியலமைப்புச் சட்டங்களே உறுதிப்படுத்துகின்றன. இன்று அதனை உடைக்க மதவாத கும்பல் முயன்றாலும், அது உருவாக்கப்பட்ட காலத்திலும் இன்றும் வலிமையான ஒன்றாக எளிய மக்களுக்கும் உதவுகிறதாகவே உள்ளது.

**அனைவருக்கும் வாக்குரிமை**

பாலினம், வகுப்பு, கல்வி, சாதி, மதம்  என எந்த பாகுபாடுமின்றி அனைத்து வயது வந்தோர்களுக்கும் வாக்குரிமையை இந்தியா சாத்தியப்படுத்தியுள்ளது. பல்லாண்டுகளாக காலனித்துவ நாடாக இருந்த நாடு இந்தியா. பணக்கார ர்கள் ஏழைகளுக்கான இடைவெளி இன்றும் இருக்கிறது. ஆனாலும் அனைத்து மக்களுக்குமான வாக்குரிமையை இந்தியா சாத்தியப்படுத்தியது மகத்தான சாதனை.

**ராணுவ ஒழுக்கம்**

இந்தியாவில் அருகில் உள்ள பாகிஸ்தான், இலங்கை, வங்க தேசம் ஆகிய நாடுகளில் ராணுவ கலகம் நடந்துள்ளது. இன்றுவரை பாகிஸ்தானில் ராணுவம்தான் மறைமுக ஆட்சியாளராகவே உள்ளது. ஆனால் இந்தியாவில் அப்படிப்பட்ட கலகங்கள் நடைபெறவில்லை. இதற்கு காரணம், ராணுவம் அரசியல் விவகாரங்களில் உள்ளே வரக்கூடாது என சட்டம் உள்ளதுதான். இதனால் இங்கு அரசியல் ரீதியில் பாதிப்பு ஏற்பட்டாலும் கூட ராணுவம் அதில் தலையிடாமல் பாதுகாப்பு பணியை மட்டுமே கவனித்துக்கொண்டிருக்கும். இதனால் நாட்டில் கலகங்கள், ராணு வ ஆட்சி ஏற்படாமல் அமைதியாக உள்ளது.

**நன்றாக சாப்பிடுங்க!**

1966 - 1978 காலகட்டத்தில் வேளாண் விஞ்ஞானி எம்எஸ் சுவாமிநாதன் அதிக விளைச்சல் தரும் பயிர் ரகங்களை ஆராய்ச்சி செய்து அறிமுகப்படுத்தினார். அப்போது இந்தியாவில் ஊட்டச்சத்து பற்றாக்குறை இருந்தது. உணவும் அனைத்து மக்களுக்கும் கிடைக்கவில்லை. வேளாண்துறைக்கான பொருட்களும் கிடைப்பது தட்டுப்பாடாக இருந்த து.  சுவாமிநாதனின் பசுமை புரட்சி நாட்டையே மாற்றியது. உணவு உற்பத்தியில் தன்னிறை பெற அவரின் ஆலோசனைகள் முக்கியமானவை.

**சட்டம் அனைவருக்குமானது!**

சட்டம் என்பது அனைவருக்குமானது என்பது இன்று மதவாத கும்பலின் அட்டகாசம் காரணமாக இல்லாமல் போய்க்கொண்டிருக்கலாம். ஆனால் பல்வேறு பிரச்னைகளுக்காக பொது வழக்குகளை போட்டு அதனை நீதிமன்றத்தின் கவனத்திற்கு கொண்டு வந்தது முக்கியமான சாதனை. 1979ஆம் ஆண்டு பொதுவழக்குகளை தொடுப்பதற்கான சட்டம் அமலானது. இதன்மூலம் கங்கை ந தியை அழித்து வந்த தொழிற்சாலைகளின் கதவுகளை மூட முடிந்தது. வேலை செய்யும் இடத்தில் பெண்களின் மீதான பாலியல் துன்புறுத்தல்களை கேள்வி கேட்க முடிந்தது என நிறைய உதாரணங்களை காட்டலாம்.

**கேள்வி கேளு!**

முன்னாள் துணை குடியரசுத்தலைவர் ஹமித் அன்சாரி,  ஆர்டிஐ சட்டத்தை சுதந்திர இந்தியாவின் முக்கியமான சட்டம் என்று சொன்னார். இந்த சட்டம் மூலம் நாட்டில் நடந்த ஏராளமான ஊழல்கள், பிரச்னைகள், செயல்படாத பணிகள் வெளியே தெரிய வந்தன. இதனை கொண்டு வந்த காங்கிரஸ் அரசே இதில் மாட்டிக்கொண்டு பின்னாளில் ஆட்சியையும் இழந்தது வேடிக்கையானது. இன்று இதனை நீர்த்துபோகச்செய்யவும், கேள்வி கேட்பவர்களை கொல்லவும் மதவாத கும்பல் தீர்மானித்து செயல்பட்டு வருகிறது.

**காடு நம் வீடு!**

1927ஆம் ஆண்டு காடுகளை பாதுகாக்க உருவான சட்டத்தில் நிறைய ஓட்டைகள் இருந்தன. அதனை சரிசெய்து 1980ஆம் ஆண்டு புதிய சட்டம் உருவானது. இது முழுக்க நேர்த்தியான சட்டம் என்று கூறிவிட முடியாதுதான். ஆனாலும் இந்த சட்டம் காடுகள் அழிவதையும், நீராதாரங்களை தொழில்துறையினர் சிதைப்பதையும் ஓரளவு தடுத்தது.

**தேர்தல் வன்முறை**

இன்று திட்டமிட்டு தேர்தல் வன்முறைகளை செய்து அதனை அரசு தேர்வில் கூட கேள்வியாக கேட்க வைத்து அதற்கு மாணவர்களை பதில் சொல்ல வைக்கும் குரூரம் ஒன்றிய அரசிடம் உள்ளது. ஆனால் தேர்தல் முதன்முறையாக 1951ஆம் ஆண்டு நடைபெறும்போது எந்த வன்முறையும் நடைபெறவில்லை. அமைதியான முறையில் வாக்குப்பதிவுகள் நடந்து முடிந்தன. ஆட்சிமாற்றமும் கட்சிகளிடையே இயல்பாக நடந்தது.

**எலக்ட்ரானிக் வாக்குபதிவு**

எலக்ட்ரானிக் முறையில் வாக்குப்பதிவு தொடங்கியபிறகு கள்ள வாக்கு என்பது குறைந்துவிட்டது. இன்றும் கூட இதன் நம்பிக்கைத் தன்மை கேள்விக்குள்ளாக்கப்பட்டு திரும்ப வாக்குச்சீட்டிற்கு போய்விடலாமா என நினைக்கும் பழமை வாத கட்சிகள் உள்ளனர். ஆனால் அது எளிதல்ல. இன்று வாக்குப்பதிவு வேகமாக நடத்தவும், அதனை எண்ணி முடிவை அறிவிக்கவும் எலக்ட்ரானிக் மெஷினே உதவுகிறது.

**இட ஒதுக்கீடு**

இந்தியாவில் அமலான இட ஒதுக்கீடு, பல்லாண்டுகளாக ஒடுக்குமுறைக்கு உள்ளான பல்வேறு சாதிகளை கல்வி, வேலைவாய்ப்பு ஆகியவற்றில் முக்கியமான இடங்களுக்கு கொண்டு வந்தது. பட்டியலின மக்கள்,

ஆதிதிராவிடர்கள் ஆகியோர் இதனால் பயன்பெற்றனர். தேர்தலில் கூட இட ஒதுக்கீடு, தீண்டப்படாத சாதியினரை அதிகாரத்திற்கு கொண்டு வந்தது. 33 சதவீத இட ஒதுக்கீடு என்பது பாராளுமன்றத்தில் இன்னும் அமலாகவில்லை. அப்படியிருந்தாலும் கூட ஆட்சி நிர்வாகத்தில் பெண்களின் பங்களிப்பை அரசியல் கட்சிகள் உணர்ந்துள்ளன. அதற்கேற்ப தொகுதிகளில் பெண்களை வேட்பாளர்களாக நிறுத்தும் போக்கு அதிகரித்து வருகிறது.

**HT**

**Rachel Lopez**

**20**



## நவீன இந்தியாவை உருவாக்கிய சாதனையாளர்கள்

பட்டியலில் ஒடிஷாவை சேர்ந்த ஐந்து விஞ்ஞானிகள் இடம்பெற்றுள்ளனர். அறிவியல் மற்றும் தொழில்நுட்ப துறை பிரிவில் இவர்களுக்கு இடம் கிடைத்துள்ளது. விஞ்ஞானிகளின் பட்டியலை ஒன்றிய அரசின் அறிவியல் தொழில்நுட்ப அமைச்சகம் தயாரித்துள்ளது.

பெடங்காதாஸ் மொகன்டி, புவனேஸ்வர் நகரில் தேசிய அறிவியல் கல்வி மற்றும் ஆராய்ச்சிக் கழகத்தின் டீன் மற்றும் பேராசிரியராக உள்ளார். இவர், இயற்பியலாளராக பல்வேறு ஆராய்ச்சிகளை செய்து வருகிறார். அதில் குறிப்பிடத்தக்கது, கரும்பொருள் பற்றிய ஆராய்ச்சியாகும்.

ஜோதிர்ரஞ்சன் எஸ் ரே, நாகர்கன்டா என்று பகுதியில் பிறந்தவர். புவி அறிவியல் படிப்புகள் தொடர்பான தேசிய மையத்தில் இயக்குநராக உள்ளார். தற்போது திருவனந்தபுரத்தில் பணியாற்றுகிறார். இவர், பாறைகளின் வயதைக் கண்டுபிடிக்கும் ஆராய்ச்சியை செய்து வருகிறார். விந்திய மலைத்தொடரின் வயதைக் கண்டுபிடிக்கும் புவியியல் ஆராய்ச்சியை செய்தவர் இவரே.

ஜோதிர்மயி தாஸ், ஐஏசிஎஸ் என்ற நிறுவனத்தில் பேராசிரியராக பணியாற்றுகிறார். இவர், ஜகத்சிங்பூர் மாவட்டத்தைச் சேர்ந்தவர். புற்றுநோய்க்கு எதிரான மருந்துகள் பற்றிய ஆராய்ச்சியை செய்து வருகிறார். இதனை மேம்பாடு செய்வது, சரியானபடி மருந்தை வழங்குவது பற்றி ஆய்வு செய்து வருகிறார்.

மமோனி தாஸ், ரூர்கெலா என்ஐடியில் படித்தவர். புவனேஷ்வர் நகரில் வாழ்க்கை அறிவியல் கவழகத்தில் வேலை செய்கிறார். உயிரியல் முறையில் எளிதாக சிதையும் பாலிமர்களை தயாரிக்க முயன்று வருகிறார். இது உடலில் மருந்துகளை எடுத்துச்செல்லும் தன்மை கொண்ட செல்களைப் பற்றியதாக மேம்பாடு அடைந்துள்ளது.

நாராயண் பிரதான், ஐஏசிஎஸ் நிறுவனத்தின் பேராசிரியர். வேதியியல் ஆராய்ச்சியாளரான இவர், நானோ பொருட்களை தயாரித்து வருகிறார். நானோ கிரிஸ்டல்களை வேதியியல் மற்றும் இயற்பியல் கலந்து செய்வதாகும்.

https://timesofindia.indiatimes.com/city/bhubaneswar/5-odia-scientists-in-list-of-75-

21

## வளரும் வெறுப்புவாதம்

உள்நாட்டு விவகாரங்கள் துறை அமைச்சர் ஜி கிஷன் ரெட்டி மக்களவையில் பேசினார். அதில், லவ் ஜிகாத் பற்றிய எந்த வழக்குகளும் மத்திய அமைப்புகளில் பதிவாகவில்லை என்று கூறினார். நிச்சயம் அப்படித்தானிருக்கும். ஏனெனில் இந்திய சமூகங்களில் பணக்கார ர்கள் பெரும்பாலும் அகமணமுறையை பின்பற்றுகிறார்கள்.அவர்களது மதத்தில் சாதி உள்பிரிவுகளுக்குள் பொருத்தமான மாப்பிள்ளை, பெண்ணைப் பார்த்து திருமணம் செய்துவைக்கிறார்கள்.

இப்படி மதம், சாதி, சாதி மறுப்பு திருமணத்திற்கு எதிரான மத்திய அரசின் லவ் ஜிகாத் சட்டம் இவற்றை பாஜக அரசு வளர்க்கவே விரும்புகிறது. எப்போதும் இந்திய சமூகம் வெறுப்பிலும், கோபத்திலும் கனன்றுகொண்டே இருக்க விரும்புகிறது. இதனால்தான் நாட்டின் பிரதமரால் எந்த கூச்சமும் இன்றி காஷ்மீர் ஃபைல்ஸ் போன்ற படத்தை பிரசாரம் செய்து மக்களிடையே பேச முடிகிறது. தற்போது நாட்டில் அரசு செயல்பாடுகள் என்பது நடப்பதை விட வெறுப்பு அரசியலும் குழு வன்முறையும்தான் அதிகரித்து வருகிறது.

பாஜக ஆளும் மாநிலங்களில் மெல்ல லவ் ஜிகாத் சட்டம் நடைமுறைக்கு வந்துகொண்டிருக்கிறது. அண்மையில் பெற்ற தேர்தல் வெற்றிகள், பாஜக கட்சியின் வெறுப்பு அரசியல், பிளவுபடுத்தும் அரசியலை இன்னும் ஆழமாக்கும். மக்கள் இந்த முறையில் வாக்களித்தது, பாஜகவிற்கு இன்னும் நெஞ்சுரம் தரும்.

2014ஆம் ஆண்டு பாஜக அரசு ஆட்சிக்கு வந்தது முதல் சிறுபான்மையினரான முஸ்லீம்களை குறிவைத்து தாக்கி வருகிறது. மாட்டிறைச்சி, முஸ்லீம்களின் மணவிலக்கு உரிமை, அவர்களின் வணிகம், உடை ஆகியவற்றை பல்வேறு சட்டங்கள் உருவாக்கி சீர்குலைத்து வருகிறது. குஜராத் மாநிலத்தில் இந்துக்கள் முஸ்லீம்களுக்கு நிலங்களை கடை வைக்க வாடகைக்கு கூட தரக்கூடாது என தனி சட்டமே உண்டு. பாஜக அரசு ஆளும் மாநிலங்களில் சிறுபான்மையினர் மீதான தாக்குதல்கள் தனி ரகமாக அதிகரித்து வருகிறது. மத்திய அரசும் பாஜகவாக இருக்கும்போது சும்மாவேனும் இருக்க முடியுமா? இதற்காகத்தான் குடியுரிமை சட்டத்தை உருவாக்கினார்கள். இதன்மூலம் முஸ்லீம்களை தனியாக பிரித்துவிட முடியும்.

கர்நாடக மாநிலத்தில் அங்குள்ள பாஜக மாநில அரசு மூலம், முஸ்லீம் பெண்கள் கல்வியறிவை பெறமுடியாதபடி தடுக்க ஹிஜாப் என பிரச்னையை ஏற்படுத்துகிறார்கள். குஜராத் மாநிலத்தில் இறைச்சி, முட்டை விற்க கூடாது என மறைமுகமாக முஸ்லீம்களை வருமானம் இழக்கச்செய்யும் முயற்சிகளை செய்கிறார்கள் அனைத்தையும் நேரடியாக செய்யமுடியாத காரணத்தால் வாய்மொழி பிறகு சட்டம் என நகர்ந்து வருகிறார்கள். இப்படி வெறுப்பு வாதம் வளருவது நேரடியாக எந்த வன்முறையையும் ஏற்படுத்தாதவரை சரிதான் என சிலர் நினைக்கிறார்கள். ஆனால் வரலாற்றில் இதற்கு எந்த எடுத்துக்காட்டும் இல்லை. அதை பின்பற்றினால், விரக்திதான் நம்மைச் சூழும்.

முஸ்லீம்கள் தங்கள் பிரச்னைகளை பேச அவர்களின் சார்பாக மக்கள் பிரதிநிதிகள் இல்லை. இதனால் அவர்களின் பிரச்னைகள் பிறருக்கு எளிதாக புரிவதில்லை. மக்கள் சாதிரீதியாக, மதம் ரீதியாக வாக்களித்தால் அவர்கள் பொருளாதாரம் ரீதியாக பெரும் பாதிப்பை சந்திப்பார்கள். இப்போது இந்தியாவில் அரசின் நிர்வாகம் நடைபெறவில்லை. குழுவாக வன்முறையும், வெறுப்பு அரசியல் வாதங்களும்தான் தினசரி நடந்து வருகிறது. இந்த உண்மை வாக்களிக்கும் மக்களுக்கு எப்போது

புரியுமோ? இன்று இந்தியா உள்நாட்டு உற்பத்தியில் வங்கதேசத்திற்கு கீழே போய் கொண்டிருக்கிறது. மக்கள்தொகையில் 60 சதவீதம் அரசின் பொதுவிநியோக முறையில் பெறும் இலவச அரிசியில் தான் வாழ்க்கையை ஓட்டுகிறார்கள். அடுத்த பத்தாண்டுகளில் நாம் இந்த திசையில் சென்றால் கிடைக்கும் பதில்கள் பயமாக அல்ல பயங்கரமாக இருக்கும்.

ஆகார் படேல் எழுதிய கட்டுரையைத் தழுவியது.

https://www.nationalheraldindia.com/india/modernity-vs-medievalism-bjps-hate-agenda

நன்றி!